20ம் நூற்றாண்டின் மிக முக்கிய

ஹரிதாசரான

# ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாசர்

கன்னடத்தில்:
திரு.ஜெயசிம்மா அவர்கள்

தமிழில்

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

89044 58276. sathyatv123@gmail.com

jagannathakesava.blogspot.com

# ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாசர்

## பொருளடக்கம்:



## தொடர்புக்கு:

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்

8904458276 haridasa.vijayam@gmail.com

jagannathakesava.blogspot.com

# முன்னுரை

ஹரிதாச சாகித்யத்தில் ஈடுபாடு கொண்ட அனைவரும் கண்டிப்பாக அறிய வேண்டியவர், ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாசர். 20ம் நூற்றாண்டின் பிற்பாதியில் ஹரிதாச சாகித்யத்திற்காக அரும்பணி ஆற்றிய மிக முக்கியமான ஹரிதாசர் இவர்.

ஸ்ரீவிஜயதாசரின் சிஷ்யரான ஸ்ரீவேணுகோபால விட்டல தாசரின் நேரடி பரம்பரையில் வந்தவரான ஸ்ரீதந்தெமுத்து மோகன விட்டல தாசரின் (பரமப்ரிய சுப்பராய தாசரின்) சிஷ்யரான இவர், மைசூரை சேர்ந்தவர். கர்னாடகத்தின் பல்வேறு பகுதிகளிலும், ஆந்திரா, தமிழ்நாடு ஆகிய மாநிலங்களிலும் பயணம் செய்து, பல சிஷ்யர்களைப் பெற்று, அவர்களுக்கு அங்கித உபதேசம் செய்து, அவர்களை நல்வழிப் படுத்திய மகானுபாவர்.

இவர் கன்னட ஹரிதாச சாகித்ய உலகிற்கு செய்த அரும் தொண்டுகளை இப்புத்தகத்தில் நீங்கள் படிக்கலாம். கன்னடத்தில் மொழிபெயர்த்த தச-உபநிஷத்கள், அங்கித பாடல்கள், பிற தேவர நாமாக்கள், தீர்த்த க்ஷேத்திர மாலா, ஹரிபக்தி விஜயம் ஆகிய அற்புத கிரந்தங்களை, மற்றும் 'ஹரிதாச தீபிகா' என்னும் மாத பத்திரிக்கையை தனது 'குரு க்ருபா கிரந்தமாலா' மூலம் வெளியிட்டு, பெரும்சேவை செய்தவர்.

இத்துடன் தாசர் இயற்றிய கோவிந்தாஷ்டகம் என்னும் கன்னட மாத்ருகான்யாச ஸ்தோத்திரத்தையும் அர்த்தத்துடன் கொடுத்துள்ளோம். இந்த ஸ்துதி தினமும் பாராயணம் செய்யத்தக்கது. தாசர் இயற்றிய வேறு சில பாடல்களையும் இந்தப் புத்தகத்தில் காணலாம்.

ஸ்ரீதாசரின் வாழ்க்கை வரலாற்றினை சுமார் 1995ம் ஆண்டு வாக்கிலேயே வெளியிட்டவர் நமது திரு.குரோம்பேட்டை ஸ்ரீதரன் அவர்கள். தற்போது அதனை மறுபடி வெளியிடுவதில் மகிழ்ச்சி கொள்கிறேன்.

என் பரமகுருவான ஸ்ரீகுருகோவிந்த விட்டலதாசரின் புத்தகத்தை, என் குரு அந்தர்கத பாரதிரமண முக்யபிராணாந்தர்கத ஸ்ரீஜகன்னாத கேசவனுக்கு சமர்ப்பிக்கிறேன்.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

**‘ஜகன்னாத கேசவ’ சத்ய நாராயணன்**

21-04-2021

ப்லவ நாம சம்வத்ஸரம் ஸ்ரீராம நவமி

## ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாசரின் ஹரிதாச குரு பரம்பரை

ஸ்ரீமன் மத்வாசார்யர்
ஸ்ரீவியாசராயர்
ஸ்ரீபுரந்தரதாசர்
**ஸ்ரீவிஜயதாசர்**
ஸ்ரீவேணுகோபாலவிட்டல தாசர்
ஸ்ரீவியாச விட்டல தாசர்
ஸ்ரீரகுபதி விட்டல தாசர்
ஸ்ரீபூவராக ரகுபதி விட்டல தாசர்
ஸ்ரீஸ்ரீபதி விட்டல தாசர்
ஸ்ரீதந்தெ ஸ்ரீபதி விட்டல தாசர்
ஸ்ரீநிதி விட்டல தாசர்
ஸ்ரீவர விட்டல தாசர்
ஸ்ரீமுத்து மோகன விட்டல தாசர்
ஸ்ரீதந்தெ முத்து மோகன விட்டல தாசர்
**ஸ்ரீகுருகோவிந்த விட்டல தாசர்**

இவருக்குப் பிறகு, என் குருவானவர்,
**ஸ்ரீஜாம்பவதிப்ரிய விட்டல தாசர்**
(ஹரதி பிரகலாதாசார், பெங்களூரு).

இவரிடம் அங்கிதம் வாங்கி இந்த திவ்ய ஹரிதாச பரம்பரையில் என்னையும் இணைத்ததற்கு, ஹரிவாயுகுருகளுக்கு நன்றி.

****

# ஸ்ரீகுருகோவிந்தவிட்டலதாசரின் வாழ்க்கை வரலாறு

1895 முதல் 1983ம் ஆண்டு வரை வாழ்ந்த குருகோவிந்தவிட்டலதாசரின் வாழ்க்கை மிக சுவாரசியமானது. தாசரின் மூதாதையர் புனே அருகில் ஒரு கிராமத்தில் இருந்து சித்தூருக்கு வந்து, பின்னர் மைசூருக்கு வந்து தங்கினர். ஆன்மிகத்தில் சிறந்தவராக விளங்கிய கோடுபளெ ஸ்ரீகோவிந்தராயர் என்பவர் இந்த வம்சத்தின் மூலபுருஷர். இந்த வம்சத்தில் பிறந்தவரான கிருஷ்ணராயர் என்பவர் சித்தூரில் வசித்து வந்தார். சாஸ்திரங்களைக் கற்றிருந்த அவருக்கு, நற்குணங்களைப் பெற்றவளான துளசி என்பவருடன் திருமணம் நடந்தது. இவர்கள் மைசூருக்கு இடம் பெயர்ந்தனர். இவர்களுக்கு ஷ்யாமராயர், வெங்கோபராயர், ராகவேந்திரராயர் மற்றும் ரங்கனாதராயர் என்று நான்கு மகன்கள் பிறந்தனர்.

இந்த நான்கு மக்களை நன்கு வளர்த்து வந்த கிருஷ்ணராயர், திடிரென்று இறந்துவிட்டார். அவரது மனைவியே தன்னந் தனியாக நான்கு மக்களையும் வளர்க்கலானார். ஷ்யாம ராயருக்கு கமலாபாய் என்பவருடன், வெங்கோபராயருக்கு ரமாபாய் என்பவருடன், ராகவேந்திரராயருக்கு லட்சுமி - திருமலராயர் என்பவரின் வம்சத்தவரான ஸ்ரீகடப்பா சுப்பராயரின் மகளான லட்சுமிபாய் அவருடன் மணம் செய்வித்தார். ரங்கனாதராவ் மற்றும் லட்சுமிபாய் தம்பதிகள், அவரின் வேலை நிமித்தமாக சிக்மங்களூருக்கு வந்து சேர்ந்தனர். இவரின் ஒரே மகனாக ஸ்ரீகுருகோவிந்ததாசர். 1895 ஆண்டு ஜயநாம சம்வத்ஸரம் சிராவண பஹுள த்வாதசி செவ்வாய்க்கிழமை தேதி 18-ஆகஸ்ட்-1895 அன்று பிறந்தார். தம் வம்சத்தின் மூல புருஷரின் நினைவாக, தந்தை இவருக்கு கோவிந்த என்று பெயரிட்டார்.

லட்சுமிபாய் கர்ப்பிணியாக இருந்தபோது, பெரிய ஞானியான இபராமபுரத்து ஸ்ரீஅப்பாவர் என்று புகழ்பெற்ற ஸ்ரீகிருஷ்ணா

சார்யரின் மகனான ஸ்ரீஓபளாசார்யர் சிக்மங்களுக்கு வந்திருந்தார். அவர் தேஜஸ்வியாக ஒளிர்ந்து கொண்டிருந்த லட்சுமிபாய் அவர்களுக்கு மந்திராட்சதை வழங்கி அருளி 'நற்புத்ரன் உண்டாகட்டும்' என்று ஆசிர்வதித்தார். இந்த சம்பவத்தை ஸ்ரீகுருகோவிந்ததாசர் தமது 'ஆ நமிபெ மாதெ பிதரக்கெ' என்னும் பாடலில் இப்படியாக விவரித்திருக்கிறார்.

சிரி ரங்கனாதக்ய | வர குவரகீயுத்த
வரலக்ன ஜருகிஸிரெ | தாம்பத்ய சுகதொளகெ
இருதிரலு இபராம புரத முனிசுதர பரவாயுத்து சிக்கமகளூரிகெ|
வரமுனியனுக்ரஹத | லோர்வசுதனுதயதனெ
நெரெதிளுபி போரமடலு சதியு லட்சுமிபாயி
வரகுவரனம் ப்ரசவிசுத | பதியொடனெ சந்தசதி காலகளெயுதிரலு ||

முழு நிலவின் ஒளியைப் போல ஒளிர்ந்திருந்த கோவிந்தனின் பாலலீலைகளை பெற்றோர் கண்டு மகிழ்ந்திருந்தனர். ஆனால் அந்த மகிழ்ச்சி பல நாட்களுக்கு நீடிக்கவில்லை. அவர்களின் வாழ்க்கையில் விதி விளையாடியது. கோவிந்தனுக்கு நான்கு வயதாக இருக்கும்போது, தந்தை ரங்கனாதராயர், திடீரென்று நோய்வாய்ப்பட்டு இறந்தார். இன்னும் சிறிய வயதான லட்சுமிபாய்க்கு இந்த சம்பவம் பயங்கர அதிர்ச்சியாக இருந்தது. தன் நான்கு வயது மகனை அழைத்துக்கொண்டு தாய் வெளியே புறப்பட்டாள்.

நால்காரு வருஷகளு | தாயாத்யதொளு துடிது
நால்கெண்டு கடுக்ரூர | வாக்குகள சஹிசுத்த
ப்ராக்கு கர்மத பலவ | முக்கலேபேகெம்ப வாக்குகள மன்னிசுதலி ||

என்று தாசரே சொன்னதைப் போல, நான்கைந்து ஆண்டுகள், உறவினர்களின் வீட்டில் தங்கி, அவர்களின் கடுஞ்சொற்களை தன் ஒரே மகனுக்காக பொறுத்துக்கொண்டு அந்தப் பெண்

வாழ்ந்து வந்தார். தன் பெரியப்பாவான ராகவேந்திரராயரின் வீட்டில் இருந்தபோது, கோவிந்தனுக்கு 11 வயதில், உபநயனம் நடந்தது.

உறவினர்களின் வீட்டில் தங்கியது இருவருக்குமே பிரச்னையாக இருந்தது. கடும் திட்டுகள். கோவிந்தனும் தனது படிப்பிற்கு நடுவில், பல வீட்டு வேலைகளை செய்ய வேண்டியிருந்தது. வீட்டிற்கு நீர் இறைப்பது, கடைகளுக்குப் போய்வருவது, அதிக எடையுள்ள சாமான்களை தூக்கிவருவது என்று அவனின் வயதுக்கு மீறிய வேலைகளை கோவிந்தன் செய்துவந்தான்.

கோவிந்தனின் பெரியப்பாவான ராகவேந்திரராயர் தினமும் ஒரு பெரிய தொட்டியில் அமர்ந்து இயற்கை வைத்தியம் செய்துகொண்டிருந்தார். அந்த பெரிய தொட்டியை தினமும் சுத்தம் செய்து, அதில் நீர் நிரப்புவது கோவிந்தனின் வேலை. சிறுவன் கோவிந்தன் மற்ற சிறுவர்களைப் போல துடுக்குத் தனமாக இல்லாமல், இந்த அனைத்து வேலைகளையும் மிகுந்த பணிவுடன் செய்துவந்தான்.

இவனது அண்ணன் மக்களான கிருஷ்ணமூர்த்தி மற்றும் பத்மாவதிக்கு மட்டும் வீட்டில் ராஜமரியாதை கிடைத்துவந்தது. ஆனால் கோவிந்தனுக்கு மட்டும் பலவிதமான வேலைகள், அனைவரும் உண்டு மிச்சம் மீதி இருக்கும் உணவே கோவிந்தனுக்கு கிடைத்தது. தாய் லட்சுமிபாய்க்கும் இதேதான்.

அவளால் இதை சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. ஆனால் தனது ஏழ்மையில் வேறெங்கும் போவதற்கும் வழியில்லை. ஆகவே அவள் தன் அனைத்து கஷ்டங்களையும் அனாதபந்துவான ஸ்ரீஹரியிடம் சமர்ப்பித்து, ஹரி ஸ்மரணை யிலேயே நாட்களை கழித்துவந்தாள். ராகவேந்திரராயருக்கு சிக்மங்களூருக்கு பணி இடமாற்றம் வந்தது. லட்சுமிபாயும்,

கோவிந்தனுடன் சிக்மங்களூர் வந்தாள். கோவிந்தனை அங்கே பள்ளியில் சேர்த்தனர்.

இந்த நிலையில் திடீரென்று ராகவேந்திரராயரும் இறந்தார். இவர் இறந்தபிறகு, லட்சுமிபாய் மற்றும் கோவிந்தனுக்கு வீட்டு வேலைகள் மேலும் அதிகரித்தன. ஒரு நாள் கோவிந்தனுக்குக் கொடுத்த உணவு மிகவும் கெட்டுப்போய் அதை அவனால் உண்ணமுடியவில்லை. அதைப்பற்றி தன் பெரியம்மாவிடம் கோவிந்தன் சொல்ல, பெரியம்மாவிற்கு கோபம் வந்தது. நன்றாக திட்டினாள். இதைக் கேட்ட கோவிந்தன் அதிர்ச்சி அடைய, லட்சுமிபாய்க்கு தன் இயலாமையைக் கண்டு கண்ணீர் வந்தது.

பிறகு இன்னொரு சம்பவமும் நடந்தது. கோவிந்தனின் பள்ளியில் அனைத்து மாணவர்களும் தொப்பி அணிந்து வரவேண்டியிருந்தது. கோவிந்தனிடம் தொப்பி இருந்திருக்க வில்லை. ஆசிரியரோ - தொப்பி இல்லாமல் பள்ளிக்கு வரக் கூடாது என்றுவிட்டார். கோவிந்தன் வீட்டிற்கு வந்து தாயிடம் கூறினான்.

கையில் காசு இல்லாத லட்சுமிபாயோ, உன் பெரியம்மாவையே கேள் என்றுவிட்டார். கோவிந்தனும் சென்று பெரியம்மாவிடம் கேட்டான். பெரியம்மாவோ - உன் நிலைக்கு தொப்பி ஒன்றே குறை இப்போது - என்று திட்டி அனுப்பிவிட்டார். இதைக் கேட்ட லட்சுமிபாய் மிகவும் வருந்தினார். தன் மகனான கிருஷ்ணமூர்த்திக்கு தொப்பி வாங்கிக் கொடுத்து, கோவிந்தனுக்கு இல்லை என்றதைக் கண்ட இவர் மிகவும் துயரப்பட்டார். மேலும் - தொப்பி கிப்பி எதுவும் இங்கு இல்லை. எங்கு கிடைக்கிறதோ நீங்கள் அங்கு போகலாம் என்றுவிட்டார்

பெரியம்மா. இனி இங்கிருக்கக்கூடாது என்று முடிவெடுத்தார் லட்சுமிபாய். உடனடியாக தன் மகன் கோவிந்தனை

அழைத்துக்கொண்டு, மனதில் ஸ்ரீஹரியை நினைத்தவாறு வீட்டை விட்டுப் புறப்பட்டார்.அனாதோ தெய்வ ரக்ஷக: என்னும் வாக்கு பொய் அல்ல. நம்மை இனி அந்த ஸ்ரீஹரியே காப்பாற்றட்டும் என்று தாய் முடிவெடுத்தாள். அப்போது சிக்மங்களூரில் பொறியாளராக, ஸ்ரீ நவரத்ன ராமராயர் வசித்துவந்தார். பரந்த மனம் கொண்டிருந்த ராமராயருக்கு, கங்காபாய் என்னும் நற்குணங்களைக் கொண்ட பெண் மனைவியாக இருந்தார். கங்காபாய்க்கு லட்சுமிபாயின் அறிமுகம் ஏற்கனவே இருந்தது.

லட்சுமிபாய் கோவிந்தனுடன் ராமராயர் வீட்டிற்கு வெளியே சென்று கொண்டிருந்தபோது, கங்காபாய் வீட்டின் வெளியே அமர்ந்திருந்தார். இவர்களின் நிலையைக் கேள்விப்பட்டு, இவர்களை வீட்டினுள் அழைத்துச் சென்றார். அவருக்கு உணவளித்தார். லட்சுமிபாயின் சோகக் கதையைக் கேட்ட கங்காபாயின் மனம் மிகவும் துக்கமடைந்தது. அவர் ‘லட்சுமிபாய் அவர்களே, இனி யோசனையை விடுங்கள். இனி நீங்கள் எங்கள் வீட்டிலேயே இருக்கலாம். உங்களுக்காக இரு கரண்டி அன்னம் அதிகமாக சமைப்பதற்கு எனக்கு எதுவும் பிரச்னையில்லை. நம் வீட்டுப் பிள்ளைகளுடன் உங்கள் கோவிந்தனும் வளரட்டும். கஷ்டத்தில் இருப்பவர்களை கடவுள் என்றும் கை விடுவதில்லை. தைரியமாக இருங்கள். நாளை உங்கள் மகன் பெரிய கல்வி கற்று, முன்னேறுவான்’ என்று ஆறுதல் கூறினார்.

இந்த சம்பவத்தைக் குறித்து குருகோவிந்ததாசர், தனது ஒரு பாடலில் இவ்வாறு கூறியிருக்கிறார்.

நூகுதிரெ கெலகால ।தோககாய்து உபநயன
காகுமாதுகளாடி நூகலூ க்ருஹதிந்த
ஆ குமார த்ருவன நோகிதா பரியாய்து எந்தெனுத ஹொரடலு।

த்ருவவரத நங்க்ரியனே ।பவிதரத மனதி சு
ஸ்தவன கௌயுத பருலு ।திவதல்லி பொளயொளகெ
நவரதுன குலபந்து ।நவவெரடு வயசின
குவரனம் மாதெயொடனெ சவினுடியலாதரஸி தவகதலி சலஹுதிரெ ।।

உறவினர்கள் அனைவரும் கைவிட்டபிறகு, யாரோ தெரியாதவர் ஒருவர் தனக்கு ஆதரவு அளித்தது,

அந்த இறைவனின் கருணையினாலேயே என்று லட்சுமிபாய் நினைத்தார். நவரத்ன ராமராயரின் வீடு சம்பிரதாயங்களை பின்பற்றும் வீடு. பஜனை, உபன்யாசம், பாராயணம் ஆகிய ஆன்மிக நடவடிக்கைகள், அவரது வீட்டில் தொடர்ந்து நடைபெற்று வந்தன. கோவிந்தனுக்கு

இந்த சூழல் மிகவும் பிடித்திருந்தது. அனைத்தையும் தொடர்ந்து கேட்டுவந்ததால், கோவிந்தன் மனதில் பக்தி உண்டாகத் தொடங்கியது. விளையும் பயிர் முளையிலேயே தெரியும் என்பதுபோல கோவிந்தன் பிற்காலத்தில் பெரிய ஆளாகி, புகழ்பெற்று விளங்குவான் என்பது இந்த சிறிய வயதிலேயே தெரியத் துவங்கியது.

கோவிந்தன், மூன்று வேளையும் சந்தியாவந்தனம் செய்தது மட்டுமல்லாமல், வாயுஸ்துதி, விஷ்ணு சஹஸ்ரநாமம், வெங்கடேச ஸ்தோத்திரம் ஆகியவற்றை மனப்பாடம் செய்தான். நேரம் கிடைத்த போதெல்லாம் மணிமஞ்சரி, சுமத்வவிஜயம், பகவத்கீதை பாடங்களையும் படித்தான். மிகவும் புத்திசாலியாக விளங்கினான் கோவிந்தன். பள்ளியில் நடக்கும் அனைத்து போட்டிகளிலும் பங்கேற்று முதலில் வந்திருந்தான். ஓடுதல், நீந்துதல், கால்பந்து ஆகிய விளையாட்டுகளில் தேர்ந்தான்.

பள்ளியின் ஆண்டுவிழா, சுதந்திரதின விழா என பள்ளியில் நடைபெறும் சிறப்பு நிகழ்ச்சிகளில் கோவிந்தன் முழுமனதுடன்

பங்கேற்று பரிசுகளை வென்றுவந்தான். நாடகங்களில் நடிப்பதிலும் ஈடுபாடு காட்டினான்.

ஒரு முறை அவனின் பள்ளியின் கன்னட ஆசிரியர் நடத்திய 'வேணிசம்ஹார' நாடகத்தில், கோவிந்தன் அஸ்வத்தாமன் பாத்திரத்தை ஏற்று சிறப்பாக நடித்தான். இன்னொரு முறை ஆங்கில ஆசிரியர் நடத்திய 'Merchant of Venice' நாடகத்தில் 'Shylock' பாத்திரத்தை ஏற்று சிறப்பாக நடித்து அனைவரின் பாராட்டுதல்களையும் பெற்றான்.

படிப்பிலும் கோவிந்தன் முதலாவதாகவே வந்தான். அவனின் நினைவுத்திறன் மிகவும் அபாரமாக இருந்தது. மிகவும் பணிவுடன் அனைத்து பாடங்களையும் படித்து, முதலாவ தாகவே வந்து, தேர்ச்சி பெற்றான். SSLC வகுப்பில் தேர்ச்சி பெற்றபிறகு, கோவிந்தனுக்கு பொறியியல் படிக்கவேண்டு மென்ற ஆசை வந்தது. மதராஸிலிருந்த ஒரு கல்லூரிக்கு கோவிந்தன் விண்ணப்பித்தான். நன்கு மதிப்பெண்கள் எடுத்திருந்த கோவிந்தனுக்கு அங்கு படிப்பதற்கு அனுமதி கிடைத்தது. உடனே வந்து சேரும்படி கடிதமும் வந்தது. இவ்வளவு நாள், தந்தையில்லாமல் தானே ஒருவளாக கோவிந்தனை

பார்த்துக் கொண்டிருந்த லட்சுமிபாய்க்கு அவனை விட்டுப் பிரிய மனமில்லை. 'அவ்வளவு தூரம் உன்னை தனியாக எப்படி அனுப்பட்டும்? என்னால் உன்னை விட்டு இருக்க முடியாது' என்றார். தாயின் கண்ணீரைக் கண்ட கோவிந்தனுக்கு மனம் கலங்கிற்று. 'உன் இஷ்டப்படியே ஆகட்டும் அம்மா. நான் மதராஸ்க்கு போகவில்லை. உன்னுடனேயே இருக்கிறேன்' என்று தைரியம் அளித்தான். இருந்த ஊரிலேயே பொறியியல் டிப்ளொமா படிப்பதற்கு கோவிந்தன் விண்ணப்பித்தான். அன்றைய காலத்தில் ஆற்காட் நாராயணஸ்வாமி கல்லூரியில் பொறியியல் டிப்ளொமா வகுப்புகள் நடந்துவந்தன.

தாய் கஷ்டப்பட்டு சிறிதுசிறிதாக சேர்த்து வைத்த பணத்தைக் கட்டி கோவிந்தன் அங்கு சென்று சேர்ந்தான். கவனத்துடன் படித்து டிப்ளொமா படிப்பை முடித்தான். அரசு பொதுப்பணித் துறையில் வேலையும் கிடைத்தது. சப்-ஓவர்சியராக வேலையில் சேர்ந்தான் கோவிந்தன். தாயின் மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. இறைவனின் கருணையால் முன்னுக்கு வந்த தன் மகனைக் கண்டு தாயின் மனம் நிரம்பியது.

## திருமணம்

வேலைக்குச் சேர்ந்த கோவிந்தன், அரசு வேலையில் தன் வாழ்க்கையை துவக்கினான். ஒரே இடத்திலிருந்து செய்யும் வேலையாக அது இருக்கவில்லை. ஊர்ஊராக மாறுதல் வரத்துவங்கியது. அப்போதெல்லாம், கோவிந்தன் தன் தாயுடன் அந்தந்த ஊருக்குச் செல்வது வாடிக்கையாக இருந்தது. தன் காலம் முடிந்தபிறகு கோவிந்தன் தனியாக இருக்கக் கூடாதென்று தான் இருக்கும்போதே அவனுக்கு ஒரு திருமணம் செய்துவிட வேண்டும் என்று அந்தத் தாய் நினைத்தார். தன் ஆசையை மகனிடமும் கூறினார். தன் தாயின் ஆசையை கோவிந்தனால் மறுக்கமுடியவில்லை. திருமணம் செய்துகொள்ள ஒப்புக்கொண்டார்.

மைசூரின் C.N. யாதவமூர்த்தி ராயரின் மகளான துளசம்மா (கிருஷ்ணவேணி) என்னும் கன்யையை கோவிந்தராயர் திருமணம் செய்துகொண்டார். அனைத்து நற்குணங்களையும் பெற்றிருந்தார் துளசம்மா. வீட்டிற்கு வரும் விருந்தினர்களை நன்கு கவனித்து வந்தார். விரத நியமங்களை நன்கு பின்பற்றி வந்தார். தெய்வபக்தி நிறைந்தவராகவும், கணவனுக்கு அனுசரணையாகவும் இருந்து நல்ல மனைவியாகத் திகழ்ந்தார்.

கோவிந்தராயர் கிருஹஸ்த வாழ்க்கையைத் துவக்கினார். ராயருக்கு துவக்கத்திலிருந்தே ஆன்மிகத்தில் ஈடுபாடு இருந்தது. உடன் மனைவியும் அப்படியே அமைந்து விட்டதால்

கேட்க வேண்டுமோ? பாலில் சர்க்கரை சேர்த்தது போல் ஆயிற்று இவர்கள் வாழ்க்கை. கோவிந்தராயர் 1913 முதல் 1921ம் ஆண்டு வரை கிருஷ்ணராஜசாகரில், பொதுப்பணித் துறையில் வேலை செய்தார். திருப்தியான தாம்பத்யத்தின் காரணமாக அவருக்கு 1920ல் ஒரு பெண் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தைக்கு 'பத்மாவதி' என்று பெயரிட்டனர். மறுபடி 1921ன் இறுதியில் இன்னொரு பெண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு 'கமலா' என்று பெயரிட்டனர்.

கோவிந்தராயர் கிருஷ்ணராஜசாகரத்தில் இருந்தபோது, வருவோர் போவோர் பயணிகள் என அவர் வீடு எப்போதும் நிரம்பியிருந்தது. இவர்கள் கஷ்டப்பட்ட நிலையில் இருந்தபோது, இவர்களை மதிக்காத, இவர்களுக்கு உதவாத உறவினர்கள், கோவிந்தராயர் தற்போது நல்ல நிலைக்கு வந்தபிறகு, அவரின் வீட்டிற்கு வரத்துவங்கினர். ஒவ்வொரு மழைக்காலத்திலும் கிருஷ்ணராஜசாகர் அணை நிரம்பியபோது, அதைக் காண வந்த உறவினர், இவரது வீட்டிலேயே தங்கலாயினர். கஷ்டப்பட்டபோது உதவாத உறவினர்கள், தான் நலமாக இருக்கும்போது வருவதைக் கண்ட கோவிந்தராயர், எந்தவித எதிர்வினையும் ஆற்றாமல், விசாலமான மனதுடன் அவர்களை வரவேற்று உபசரிக்கலானார். தாய்

லட்சுமிபாய்க்கும், மனைவி துளசம்மாவிற்கும், அதிதிகளை வரவேற்று உபசரிப்பதில் மிகவும் ஈடுபாடு இருந்தது. வந்த அனைவரையும் மிகவும் மரியாதையுடன் நடத்தி, நல்ல உணவுகளையும் வழங்கினர். இத்தகைய பழக்கங்கள் சஜ்ஜனர்களுக்கு மட்டுமே இருக்கும். சரிதானே?

இப்படி இருக்கும்போது, கோவிந்தராயருக்கு ஒரு முறை மலேரியா நோய் வந்தது. உடல்நிலை மோசமடையத் துவங்கியது. ஸ்ரீஹரி அவர் கனவில் வந்து - ராயரே, உங்களுக்கு இந்த இடம் சரிப்படவில்லை. ஆகவே, உடனே பணியிடத்தை மாற்றி வேறு ஊருக்குச் செல்லுங்கள் - என்று

கூறினார். வைத்தியர்களின் சிபாரிசின் பேரில், கோவிந்தராயர் தம்மை வேறு ஊருக்கு மாற்றம் செய்யுமாறு அலுவலகத்தில் சொல்ல, அரசும் அதை ஏற்று, அவரை கோலாருக்கு மாற்றினர்.

கோலாருக்கு வந்தபிறகு கோவிந்தராயர், ஆயுர்வேத சிகிச்சை மேற்கொண்டார். இதனால் அவரது உடல்நிலையில் சிறிது முன்னேற்றம் ஏற்பட்டது. அடுத்த சில நாட்களிலேயே அரசு ராயரை சிக்கபள்ளாபுரத்திற்கு அனுப்பியது. சிக்கபள்ளாபுரத்தில் இருந்தபோது ராயர் அங்கிருந்த வைஷ்ணவர்கள் அனைவரின் உதவியுடன் ஊரிலிருந்த பிராணதேவரின் ஆலயத்தில், ஒவ்வொரு ஆண்டும் மத்வநவமி உற்சவத்தை நடத்தி வந்தார்.

ஒரு முறை, மத்வநவமி விழாவிற்கு இன்னும் சில நாட்களே இருந்தபோது ஊரில் ப்ளேக் நோய் பரவியது. துரத்ருஷ்ட வசமாக, கோவிந்தராயருக்கும் இந்த நோயின் அறிகுறிகள் தோன்றின. ஆனாலும் அவர் பயப்படவில்லை. மத்வநவமி உற்சவம் எந்த காரணத்திற்காகவும் நிற்கக்கூடாது என்ற திடமான முடிவுடன், வீட்டில் படுத்தவாறே, ஊரின் முக்யஸ்தர் களுடன் நிகழ்ச்சிக்கான திட்டமிடலை செய்தார். இவரின் முடிவின்படியே, ஊரில் நோய் பரவியிருந்தாலும், மத்வநவமி நிகழ்ச்சி எந்தவித பிரச்னைகளும் இல்லாமல் சுபமாக நடைபெற்றது. பிராணதேவரின் அவதாரமான குருமத்வ முனிகளின் இதயத்தில் இருக்கும் மகாபிராணனின் கிருபையினால் கோவிந்தராயரின் நோய் முற்றிலுமாக நீங்கியது.

கோவிந்தராயரின் மனதிடத்தை சோதிக்கும் இன்னொரு நிகழ்ச்சி அவர் சிக்கபள்ளாபுரத்தில் இருந்தபோது நடந்தது. முன்பு கோலாரில் இருந்தபோது வந்திருந்த ஆஸ்துமா நோய் இங்கு மறுபடி அவரைத் தாக்கியது. பற்பல மாத்திரைகளை எடுத்துக்கொண்ட போதிலும், நாளடைவில் அவரது உடல்நிலை பலமாக பாதிப்படைந்தது.

முன்னர் என்ன செய்வதென்றே தெரியவில்லை. 'சங்கட பந்தாக வெங்கடரமணா' என்பது போல, கோவிந்தராயர், குரு ராகவேந்திரரை போய் சரணடைவது எனத் தீர்மானித்தார். ஆனால் மந்திராலயம் போவதற்கு கையில் காசு இல்லை. எப்படியாவது குருகளின் சன்னிதானத்திற்குப் போகவேண்டும் என்று ஆசை. வீட்டில் வாங்கி வைத்திருந்த அரிசியை விற்று வந்த பணத்தில், வீட்டில் உள்ளவர் அனைவரையும் அழைத்துக் கொண்டு, மந்திராலயம் செல்வதற்கு தீர்மானித்தார்.

பயணத்திற்கு புறப்படும்போது, ராயரின் பெரிய மகளான பத்மாவதிக்கு தட்டம்மை நோய் வந்தது. நோயின் தீவிரம் அதிகமாகி, குழந்தை இறக்கும் நிலை வந்தது. தாய் லட்சுமிபாயோ - கோவிந்தா, இன்னும் பயணச்சீட்டு எடுக்கவில்லை. பேசாமல் திரும்பிப் போய்விடலாம் - என்றார். குருகளின் தரிசனம் மற்றும் சேவைக்காக வீட்டை விட்டுப் புறப்பட்டபிறகு, பயணத்தை நிறுத்துவது ராயருக்கு பிடிக்க வில்லை. 'அம்மா, நாம் குருகளை நம்பி புறப்பட்டிருக்கிறோம். முன் வைத்த காலை பின்வைப்பது சரியல்ல. கருணாமயி யான அவரே நமக்கு கதி. நாம் அவரை நினைத்தவாறு முன்னேறுவோம்' என்றார். ஆவது ஆகட்டும் என்று அனைவரும் புறப்பட்டனர்.

ரெயிலில் சிறிது தூரம் போகும்போது, இன்னொரு மகளான கமலாவிற்கும் அதே நோய் தாக்கியது. ஆனாலும் ராயர் பயணத்தை நிறுத்தவில்லை. அவருக்கும் ஆஸ்துமா தொல்லை கொடுக்கத் துவங்கியது. ஆனாலும், குருராகவேந்திரரை முழுவதுமாக நம்பி, மந்திராலயத்திற்கு வந்து இறங்கிவிட்டார் ராயர்.

இப்போது உள்ளதுபோல அந்தக் காலத்தில் வசதிகள் இல்லை. இரும்புக் கம்பிகளால் வேயப்பட்ட சிறிய அறைகளே தங்குவதற்குக் கிடைத்தன. கோவிந்தராயர், தம் குடும்பத்தினருடன் அங்கேயே தங்கினார். ஆஸ்துமா பிரச்னை,

நாளைக்கு இரு வேளை குளியல், ஒரு வேளை உணவு, உண்ணும்போது ஈர உடை அணிவது - என அனைத்தும் செய்து அவரது சேவையினை செய்தார்

ராயர். ஓரிரண்டு நாட்களிலேயே வியக்கும்படியாக மகள்கள் இருவருக்கும் அவர்களது நோய் குணமடைந்தது. ராயர் அங்கேயே 20 நாட்கள் தங்கியிருந்து குருகளின் சேவையை நிறைவு செய்தார். ஆஸ்துமா அவரை துன்புறுத்தவே இல்லை. ஒரு நமஸ்காரமும் செய்வதற்கு சக்தி இல்லாமலிருந்த ராயர், 20-30 நமஸ்காரங்களை செய்யும் சக்தியினைப் பெற்றார். சுப சகுனங்கள் தென்பட்டன. 19ம் நாள் இரவு, தாய் லட்சுமிபாயின் கனவில் 'கவலைப்பட வேண்டாம். உங்கள் மகனுக்கு நோய் குணமடையும். அவருக்கு ஒரு ஆண் வாரிசும் உண்டாகும்' என்று செய்தி வந்தது. விரைவிலேயே அந்தக் கனவு பலித்தது. ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள் ராயரின் நோயினை குணப்படுத்தினார். அப்போது நீங்கிய ஆஸ்துமா நோய், மறுபடி ராயரின் வாழ்க்கையில் வரவேயில்லை. அடுத்தடுத்து செய்ய வேண்டிய சாதனைகளுக்காக, கோவிந்தராயருக்கு ராகவேந்திரார் மறுபிறவியையே கொடுத்தார் என்றால் அது மிகையாகாது.

மந்திராலயத்திலிருந்து திரும்பி வந்த ஒரு ஆண்டிலேயே கோவிந்தராயருக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. ராகவேந்திரரின் அருளால் பிறந்த அந்தக் குழந்தைக்கு, குருராஜா என்றே பெயரிட்டனர். (பின்னர் இந்த குருராஜருக்கு, உரகாத்ரி விட்டலதாசரிடமிருந்து 'காருண்ய விட்டலா' என்று அங்கிதம் கிடைத்தது).

கோவிந்தராயர், சிக்கபெள்ளாபுரத்தில் இருந்தபோது அரசு பொதுப்பணித்துறையிலிருந்து பலரை வேலையை விட்டு நீக்கியது. இதன் தாக்கம் நம் ராயருக்கும் வந்தது. அரசு, கோவிந்தராயரையும் வேலையை விட்டு நீக்கியது. அது 1925ம் ஆண்டு. கோவிந்தராயரின் மாமனார், யாதவமூர்த்தி அவர்கள்,

பாண்டவபுரத்தில் வருவாய்த்துறை அதிகாரியாக இருந்தார். கோவிந்தராயர் பாண்டவபுரத்திற்குச் சென்று, தம் மாமனாரை சந்தித்தார். முன்னர் என்ன செய்வது என்று தெரியாமல், இரு எருதுகளை வாங்கி விவசாயம் செய்யலாம் என்று முடிவெடுத்தார். ஆனால், இறைவனின் எண்ணம் வேறு. வேலை போய் இன்னும் ஒரு மாதம்கூட ஆகியிருக்கவில்லை. மறுபடி வந்து வேலைக்கு சேரும்படி அரசிடமிருந்து ஆணை வந்தது. இந்த முறை வேலை நாகமங்களாவில் அமைந்தது.

## சாஸ்திரங்களைப் படித்தல்

அரசின் ஆணைப்படி கோவிந்தராயர் நாகமங்களா வந்து அங்கு வேலையில் சேர்ந்தார். இங்கும் அவரது ஆன்மிக செயல்பாடு கள் தொடர்ந்தன. அந்த ஊரிலிருந்த வைஷ்ணவர்களுடன் சேர்ந்து தார்மிக காரியங்களை செய்ய முயன்றார். அப்போது அந்த ஊரிலிருந்த மூத்த காவல்துறை அதிகாரி ராமண்ணா அவர்களின் தொடர்பு கோவிந்தராயருக்கு ஏற்பட்டது. தொடர்பு நட்பில் முடிந்தது.

கோவிந்தராயரின் பக்தி, நடவடிக்கைகள் ராமண்ணா அவர்களுக்கு மிகவும் பிடித்திருந்தது. ஒரு நாள், அவர் தமது வீட்டில் இருந்த கிரந்தங்களின் மூட்டை ஒன்றை, தட்சிணையுடன் கோவிந்தராயருக்கு தானம் அளித்தார். அதில் ஸ்ரீமதாசார்யரின் சர்வமூல கிரந்தங்கள் இருந்தன. இதைப் பார்த்து கோவிந்தராயர் மிகவும் வியப்படைந்தார். அவர் சாஸ்திரங்களைப் படித்தவரல்ல. சமஸ்கிருதமும் அறிந்தவரல்ல. ‘ராமண்ணா அவர்களே, இந்த தானத்தைப் பெறுவதற்கு நான் தகுதி அற்றவன். வேறு தகுதியானவருக்குக் கொடுங்கள்’ என்றார். அதற்கு அவர் ‘ராயரே, தங்களுக்கே இதை கொடுக்கவேண்டும் என்று என் மனதிற்குப் பட்டது. இன்று இல்லாவிட்டாலும், எதிர்காலத்தில் நீங்கள் இவற்றைப் படிக்கலாம். ஆகவே தயவு செய்து இந்த தானத்தைப்

பெற்றுக்கொள்ளுங்கள்' என்றார் இதனால் சமாதானமடைந்த கோவிந்தராயரும் அதை பெற்றுக்கொண்டார்.

'விப்ரவாக்யோ ஜனார்த்தன:' என்பது போல, ராமண்ணரின் வாக்கு விரைவில் உண்மையாயிற்று. கோவிந்தராயர் பிறகு சர்வமூல கிரந்தங்களைப் படித்தது மட்டுமல்லாமல், தச உபநிஷத்களை, ஆசார்ய மத்வரின் பாஷ்யத்திற்கேற்ப கன்னடத்தில் மொழிபெயர்த்தார். சமஸ்கிருத மொழியை கற்றுத் தேர்ந்தார். அனைத்து சாஸ்திரங்களையும் கற்று, ஆசார்ய மத்வரின் சேவையை, தம் வாழ்க்கையின் நோக்கமெனக் கருதி வாழ்ந்தார்.

நாகமங்களா வந்து இன்னும் ஓராண்டு கூட முடிந்திருக்கவில்லை. அதற்குள் கோவிந்தராயரை நஞ்சன்கூடு அருகில் முள்ளூர் என்னும் குக்கிராமத்திற்கு பணி மாறுதல் கிடைத்தது. வைஷ்ணவர்கள் வீடுகளே அங்கு இருக்கவில்லை. அரசின் ஆணைப்படி கோவிந்தராயர் அங்கு செல்லப் புறப்பட்டாலும், தாய் லட்சுமிபாய்க்கு அங்கு செல்வதற்கு கொஞ்சமும் விருப்பமில்லை. 'கோவிந்தா, இப்படி ஒவ்வொரு ஆண்டும் ஊர் ஊராக ஏன் போகவேண்டும்? யாராவது மேலதிகாரியைப் பார்த்து, ஒரே இடத்தில் இருக்குமாறு வேலை தேடக்கூடாதா?' என்றார்.

அதற்கு கோவிந்தராயர், 'அம்மா, பயணத்திற்கு காசு கொடுத்து நம்மை அரசு அனுப்புகிறது. அடிக்கடி ஊர் மாற்றினாலும், அந்த புதிய ஊரில், ஊருக்குப் பக்கத்தில் இருக்கும் க்ஷேத்திரங்கள், கோயில்கள், மனிதர்கள் என புதிதாக நிறைய பார்க்கலாம் / கற்றுக் கொள்ளலாம் அல்லவா? ஆகையால் இந்த மாற்றங்கள் ஒரு வரமே ஆகும்' என்றார். இதிலிருந்து புதிய க்ஷேத்திரங் களைப் பார்ப்பதற்கும், புதிய ஆன்மிக தார்மிக மனிதர்களைப் பார்த்து அவர்களுடன் பேசுவதில் கோவிந்தராயருக்கு இருக்கும் ஆர்வத்தை புரிந்துகொள்ள முடிகிறது.

இப்படியாக கோவிந்தராயர், ஹம்பாபுர, கிருஷ்ணராஜபேடி, பெள்ளூரு, பெலகூரு, ஹொஸதுர்க, சித்ரதுர்கா, மொளகால்மூரு, சள்ளகெரெ, ஹாஸன் ஆகிய பல ஊர்களில் மாற்றலாகி வேலை செய்தார். அனைத்து ஊர்களிலும் அந்தந்த ஊர்களில் இருந்த ஆன்மிக மக்களுடன் சேர்ந்து ஸ்ரீமத்வநவமி, ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் ஆராதனை, ஸ்ரீபுரந்தரதாசரின் ஆராதனை ஆகிய உற்சவங்களை விமரிசையாகக் கொண்டாடினார்.

இதற்கிடையில் கிடைத்த நேரங்களை வீண்டிக்காமல் வீட்டினரை அமர்த்திக்கொண்டு - புராண, புண்ய கதைகளை சொல்லலானார். அவர் தாய்க்கு பகவத்கதைகளைக் கேட்பதில் மிகவும் ஆர்வம் இருந்ததாம். ஆகவே, கோவிந்தராயரும், ஹம்பாபுர என்னும் ஊரில் இருந்தபோது, குமாரவியாசரின் பாகவதத்தை முழுவதுமாகப் படித்து, அதன் உரையைப் பற்றி உபன்யாசம் செய்தாராம்.

கோவிந்தராயர் நேரத்தை மிகவும் மதித்தார். ஒரு நொடியை யும் அவர் வீணடிக்கவில்லை. நேரம் போனால் மறுபடி கிடைக் காது என்பது அவர் வாதம். மனதில் அத்யாத்ம தத்வங்களை சிந்தித்தவாறு இருந்தார். எப்போதும் தார்மிக கிரந்தங்களைப் படித்தல், சிந்தித்தல் என்றே இருந்தார். வீட்டிலிருந்து கோயில், அலுவலகம் என்று செல்லும் நேரத்திலும் அவர் நேரத்தை வீணடிக்கவில்லை. தன் மிதிவண்டி கைப்பிடியில் ஒரு கயிறைக் கட்டி, அதில் ஜகன்னாததாசரின் ஹரிகதாம்ருத சாரத்தின் பத்யங்களை எழுதி - கட்டி வைத்து, அதை பார்த்து படித்தவாறே வண்டியில் செல்வார். அப்போது அவர் பல இடங்களுக்கு மிதிவண்டியிலேயே செல்ல வேண்டியிருந்த தால், மொத்த ஹரிகதாம்ருதசாரத்தையும் இப்படி வண்டி ஓட்டும்போதே படித்து மனனம் செய்துவிட்டாராம்.

வைஷ்ணவராகப் பிறந்தவர், சர்வக்ஞாசார்யரின் சர்வமூல கிரந்தங்களை கண்டிப்பாக படிக்கவேண்டும் என்று

மொளகால்மூர் என்னும் ஊரில் இருந்தபோது அவருக்கு தோன்றியது. வெவ்வேறு ஊர்களில் சிறிது சிறிதாகப் படித்தாலும், மொத்த கிரந்தங்களைப் படிக்கும் வாய்ப்பு அவருக்கு கிடைக்கவில்லை. பின்னர் சித்ரதுர்காவில் இருந்தபோது, அங்கிருந்த ராயர் மடத்தில் தினமும் பாடம் சொல்லிக் கொண்டிருந்த சிக்கேரஹள்ளி குண்டதாஸ் என்பவரிடம் சுமத்வவிஜயம் மற்றும் பிரமாண சந்திரிகா கிரந்தங்களைப் படித்தார். பிறகு அந்த வகுப்புகள் நின்றுபோயின. மொளகால்மூரில் மறுபடி அவருக்கு அந்த வாய்ப்பு கிடைத்தது. சிக்கேரஹள்ளி குண்டதாஸ் அவரின் மக்களான ஸ்ரீமத்வேஷதாசரு அந்த ஊரில் வசித்திருந்தார்.

மோகனதாசரின் பரம்பரையில் வந்த சிக்கெரஹள்ளி ஸ்ரீமத்வபதி விட்டலதாசரின் வம்சத்தில் வந்தது மட்டுமல்லாமல், சிறந்த அறிஞராகவும் இருந்தார், மத்வேசதாசர். கோவிந்தராயருக்கு அவரது அறிமுகம் ஆயிற்று. ஆகவே அவரிடம் சாஸ்திர பாடங்களைத் துவக்கினார். வேலைக்கும் போக வேண்டியிருந்ததால், பாடம் படிப்பதற்கு அதிக நேரம் செலவழிக்க முடியவில்லை. வேலைக்காக காலை 8மணிக்கு வீட்டை விட்டுக் கிளம்பினால், திரும்ப வருவதற்கு மாலை 7மணி ஆகிவிட்டிருக்கும். ஆனால் கோவிந்தராயர், தனது இடைவிடாத முயற்சியால், கிடைத்த நேரத்தில் பாடத்திற்கு சென்று கொண்டிருந்தார்.

அதாவது காலை 4மணிக்கே எழுந்து, தனது நித்ய கர்மானுஷ்டானங்களை முடித்து, சரியாக 6 மணிக்கு தாசர் விட்டில் இருப்பார். 6லிருந்து 8மணி வரை பாடம் படித்தல். அங்கிருந்து அவசரம் அவசரமாகப் புறப்பட்டு அலுவலகம். இப்படி ஓராண்டிற்கும் மேலாக கோவிந்தராயர் பாடம் படித்து சர்வமூல கிரந்தங்களைப் படித்து முடித்தார்.

கோவிந்தராயர், சள்ளகெரெயல்லி வேலையில் இருந்தபோது, அங்கிருந்த அதிகாரிகள் இவரது சாத்விக சுபாவத்தை தவறாகப்

புரிந்துகொண்டனர். அதனால் ஒருமுறை ஒரு தகராறு ஏற்பட்டது. தம் சாதனைக்கு தக்க இடமாக இல்லாததால், வேறு ஊருக்கு மாறுதல் கேட்க முயன்றார். உடன் தீர்வு கிடைக்காததால், ஒரு மாதம் விடுமுறை எடுத்துக்கொண்டு, கேட்டத்தை அளிக்கவல்ல ‘சுந்தரகாண்டம்’ பாராயணம் செய்யத் துவங்கினார். சுமார் 25வது நாளிலேயே, அவர் செய்த ஆத்மார்த்தமான பாராயணத்திற்கு பலன் கிடைத்தது. அரசு அவரை ஹாசனுக்கு பணி மாறுதல் அளித்தது.

இதற்கு நடுவில் கோவிந்தராயர், மேலும் இரு பெண் குழந்தைகள் மற்றும் மூன்று ஆண் குழந்தைகளுக்கு தந்தையாகி இருந்தார். அவர்களுக்கு - அனுசுயா, வெங்கம்மா, ரங்கனாத, மாதவ மற்றும் நாகராஜ என்று பெயரிட்டார். ஹாசனுக்குச் சென்ற பிறகு அவருக்கு மேலும் ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு மோஹன என்று பெயரிட்டார்.

## அங்கிதம் வாங்குதல்

கோவிந்தராயர் 1939ல் ஹாசனுக்கு வந்தார். இந்த மாற்றம் அவருக்கு ஒரு புதிய வாழ்வையே தந்தது. ஹரிதாச கூடத்திற்கு அருகில் நெருங்கி வரச்செய்தது. அங்கு கல்வித்துறையில் வேலை செய்துவந்த திரு R. ராமசந்திரராவ் என்பவரின் அறிமுகம் கிடைத்தது. அவர் தேவராயனதுர்காவின் பரமப்ரிய சுப்பராயதாசரிடமிருந்து அங்கிதம் பெற்றிருந்த ஸ்ரீஉரகாத்ரி விட்டலதாசரின் சிஷ்யர். தந்தெவெங்கடேச விட்டலா என்று அங்கிதம் பெற்று, தாச மார்க்கத்தில் பயணித்து, நூறுக்கும் மேற்பட்ட கீர்த்தனைகளை இயற்றியிருந்தார் ராமசந்திரராயர்.

ராமசந்திரராயரின் நட்பு, கோவிந்தராயருக்கு ஹரிதாச சாகித்யத்தை அறிமுகப்படுத்தியது. அவருடன் தாசகூடத்தில் பஜனை, ஏகாதசி ஜாகரணை ஆகிய நிகழ்ச்சிகளில் பங்கேற்கத் தொடங்கினார். அப்போது வந்துகொண்டிருந்த சுப்பராய தாசரின்

‘பரமார்த்த சந்திரோதய’ என்னும் மாதப் பத்திரிக்கையை கோவிந்தராயர் படிக்கத் துவங்கினார். தினந்தோறும் பல ஹரிதாசர்களின் சுளாதி, தேவரநாமங்களை கேட்கத் துவங்கினார். ‘அங்கிதவில்லத தேஹ நிஷித்த’ என்னும் ஸ்ரீபுரந்தரதாசரின் வாக்கிற்கேற்ப, கோவிந்தராயருக்கும் தாசதீட்சை பெறவேண்டும் என்று விருப்பம் ஏற்பட்டது. தாமும் அங்கிதம் பெற்று தமது இந்தப் பிறவியை மேம்படுத்திக் கொள்ளவேண்டும் என்று விரும்பினார்.

ஸ்ரீவிஜயதாசரின் சிஷ்யர்களின் ஒருவரான ஸ்ரீவேணுகோபால விட்டலதாசரின் தாச பரம்பரையில் வந்து - தந்தெமுத்து மோகனவிட்டலா என்னும் அங்கிதத்தைப் பெற்றவர் பரமப்ரிய சுப்பராயதாசர். தேவராயனதுர்காவின் நரசிம்மரின் சன்னிதியில், தாசகூடசபாவை நிர்மாணித்து, ஆயிரத்துக்கும் மேற்பட்ட சாத்விகர்களுக்கு அங்கிதங்களைக் கொடுத்து சாதனையின் வழியைக் காட்டினார். சிறு ஓடை போல ஓடிக்கொண்டிருந்த ஹரிதாச சாகித்யத்திற்கு ஒரு கடல் போன்ற பெரிய பங்களிப்பைக் கொடுத்தவர் சுப்பராயதாசர்.

பரமார்த்திக சந்திரோதய என்னும் மாதப் பத்திரிக்கையை நடத்தி வந்தார் சுப்பராயதாசர். அவரது வாக்கினால், பலர் சத்கதி வழியை அடைந்து, தங்கள் பிறவிப்பயனை அடைந்தனர். தாசரின் மகிமைகளை அறிந்த அன்றைய பெங்களூர் அரசு, சிறையிலிருந்த கைதிகளுக்கும் தர்மோபதேசம் செய்யவேண்டி தாசரை கேட்டுக் கொண்டது. இவரின் உபதேசத்தைக் கேட்ட பல கைதிகள் வெளியில் வந்தபிறகு திருந்தி வாழ்ந்தது நிஜம்.

சுப்பராயதாசரின் நல்ல ஆஜானுபாகுவான சரீரம், கம்பீரம் கூடவே நன்கு கற்றறிந்த அவரது பாண்டித்யம். ஸ்ரீவிஜயதாசரின் சிஷ்யர்களில் ஒருவரான ஸ்ரீவேணுகோபால விட்டலதாசரின் தாச பரம்பரையில் வந்த தொட்டபெள்ளா புரத்தின் முத்துமோகனதாசரிடமிருந்து அங்கிதத்தைப் பெற்று ஹரிதாச வாழ்க்கையை மேற்கொண்டவர். தலையில் காவி

முண்டாசு கட்டி, வைஷ்ணவ சின்னங்களை தரித்து ஒரு துறவியைப் போல திரிந்து வந்தவர்.

கோவிந்தராயருக்கு சுப்பராயதாசரிடமிருந்து அங்கிதம் பெறவேண்டும் என்று ஆசை பிறந்தது. ஹரிதாச தீக்ஷையைப் பெற்று, குருவின் வழியில், பிறவிப்பயனை அடைய வேண்டு மென்ற தன் விருப்பம் - ஸ்ரீஹரியின் ஆணையே என்று நினைத்தார். ஸ்ரீராமசந்திரராயர் கூறியவாறு ஆண்டு 1940ல் சுப்பராயதாசரைப் பார்ப்பதற்கு தேவராயனதுர்கா புறப்பட்டார் கோவிந்தராயர். சுப்பராயதாசரின் கருணை, பவ்யம், ஆளுமை, பாண்டித்யம் ஆகியவற்றை தனது நண்பரிடமிருந்து கேட்டிருந்த கோவிந்தராயருக்கு, குருவை என்று பார்ப்பேன், என்று அவரை வணங்குவேன், என்று அவரிடமிருந்து அங்கித உபதேசம் பெறுவேன் என்ற எண்ணம் / கேள்வி மேலோங்கியது.

அப்போது தேவராயனதுர்காவில் ரதோத்ஸவம் நடைபெறும் சமயம். கூடவே தாசகூடசபாவில் சுந்தரேச பிராணதேவரின் பிரதிஷ்டாபனை நடைபெற இருந்தது. நரசிம்ம தேவரின் ரதோத்ஸவத்தில் கலந்து கொள்வதற்கும், தமது பரம்குருவைக் காண்பதற்கும் தாம் தேவராயனதுர்கா வரப்போவதாக கோவிந்தராயர், ராமசந்திரராயரிடம் தெரிவித்தார். ஆனால் ராமசந்திரராயருக்கு வேறு வேலை இருந்ததால், இவர் மட்டுமே குருவைக் காண செல்லவேண்டியிருந்தது. ஆனால், இந்தப் பயணத்திற்கான செலவுக்கும் அவரிடம் பணம் இருக்கவில்லை.

வேறு வழியில்லை, மிதிவண்டியிலேயே எவ்வளவு வேகமாகப் போகமுடியுமோ, போய் குருவின் தரிசனத்தைப் பெற்று விடலாம் என்று எண்ணியிருந்தபோது, இறைவனாக அனுப்பிய தைப் போல, ஒரு உறவினர் வந்து, என்றோ கொடுக்கவேண்டிய பத்து ரூபாயினை திருப்பிக் கொடுத்தார். எதிர்பாராமல் கிடைத்த உதவியை எண்ணி கோவிந்தராயர் மிகவும்

மகிழ்ந்தார். குருதரிசனத்திற்கு இறைவனே ஒப்புதல் அளித்துவிட்டான் என்று நினைத்தார்.

அந்த பணத்தை வைத்து, 23 மார்ச் 1940 மதியம் ஹாசனிலிருந்து தும்கூர்க்கு ரெயிலில் புறப்பட்டார். நடுவில் அரிசிகெரெ நிலையத்தில் ரெயில் சிறிது நேரம் நின்றபோது, பெங்களூருக்கு செல்வதாகச் சொன்ன அவரது நண்பர் ராமசந்திரராயர் தென்பட்டார். குருவைக் காணச் சென்றுகொண்டிருக்கும் நண்பனைக் கண்ட ராமசந்திரராயர் மகிழ்ந்தார். 'கோவிந்தராயரே, போய் வாருங்கள். உங்களைப் பற்றி தாசரிடம் சொல்லியிருக்கிறேன். உங்களுக்கு கண்டிப்பாக குரு உபதேசம் செய்வார். நலம் உண்டாகட்டும்' என்று கூறினார். கோவிந்தராயரும் பிறகு தும்கூர் வந்து சேர்ந்தார்.

மறுநாள் விடியலிலேயே பெரியவரின் தரிசனம் பெறவேண்டும் என்று எண்ணி, சுமார் பத்து மைல்கள் நடந்து தேவராயனதுர்காவிற்கு இரவு சுமார் 10 மணிக்கு வந்து சேர்ந்தார். க்ஷேத்திரபிரபுவான நரசிம்மனின் தரிசனத்தைப் பெற்று ஆலயத்திற்குப் அருகிலேயே இருக்கும் தாசகூடசபாவில் நுழைந்து, அங்கிருந்த சுப்பராயதாசரைக் கண்டு, விழுந்து வணங்கினார்.

நல்ல ஆஜானுபாகுவான சரீரம், நம் அந்தரங்கத்தை ஊடுறுவக்கூடியதாக பெரிய கண்கள், ஒளிரும் தேகம், முகத்தில் புன்னகை. 'இவரே உன் குரு' என்று கோவிந்தராயரின் மனது சொல்லிற்று. அபூர்வமான பொருளைக் கண்டது போலாயிற்று. காலில் விழுந்து தன்னை அருளவேண்டுமென்று வேண்டினார். ஞானியான சுப்பராயதாசர், காலில் விழுந்த சிஷ்யரை, தூக்கி எழுப்பினார். நலம் விசாரித்தார். நீண்ட நாள் கழித்துப் பார்த்த நண்பரைப் போன்று கோவிந்தராயர் மிகவும் மகிழ்ந்தார்.

தாசராயரின் ஒளிரும் கண்களில், கோவிந்தராயர் தமது பிறவியின் இலக்கினைக் கண்டார். பிரமாதி சம்வத்ஸரம்

பால்குள பகுள பிரதிமையன்று 15.3.1940 அன்று கோவிந்தராயருக்கு, சுப்பராயதாசர் அங்கித உபதேசம் செய்தார். 'குருகோவிந்த விட்டலா' என்னும் அங்கிதத்தை, தமது பிம்பமூர்த்தியை வணங்கியவாறு அருளினார்.

குருகோவிந்தவிட்டலனே நீனிவர
கருணா கடாக்ஷதிந்தீக்ஷிசுத காபாடோ ஹரியே ||ப||

கருடகமனனெ தேவ கர்வகள பரிஹரிஸி
சர்வாந்தர்யாத்மகனே காபாடோ ஹரியே ||அப||

ஸ்ருஷ்ட்யாதி கர்த்தனே சுகுண மூருதி தேவ
கஷ்டகள பரிஹரிஸி காபாடோ ஹரியே |
கிருஷ்ணமூர்த்தி ஹ்ருதய அஷ்டதள மத்யதல்லி
த்ருஷ்டி கோசரனாகி காபாடோ ஹரியே ||1||

அபார மஹிமனே ஆபத்பாந்தவனாகி
தாபத்ரயகள கடிது காபாடோ ஹரியே |
கோபதாபாதி துர்ககளனெ பரிஹரிஸி பவ
கோபதிந்தெத்தி நீ காபாடோ ஹரியே ||2||

ஹரியே சர்வோத்தமனு சிரிவாயு மொதலாத சுரரெல்ல கிங்கரரெம்ப
வரமத்வ சாஸ்திர சாரவனெ திளிஸி காபாடோ ஹரியே |
பரம புருஷனே தந்தெமுத்துமோகனவிட்டலனே நின்ன
பரதராத்மகவாத திவ்ய ரூபவனெ தோரி காபாடோ ஹரியே ||3||

ஸ்ரீவிஜயதாசரின் சிஷ்யர்களின் ஒருவரான ஸ்ரீவேணுகோபால விட்டலதாசரின் தாச பரம்பரையில் குருகோவிந்தவிட்டலா என்னும் அங்கிதத்துடன் சேர்ந்து, குரு தன் தலையில் கை வைத்து ஆசிர்வதித்ததும் மெய்மறந்தார் கோவிந்தராயர். மனக்கதவு திறந்தது போல் ஆனார். சாதனத்திற்கான வழி திறந்தது.

சுப்பராயதாசரின் சிஷ்யர்களின், குருகோவிந்ததாசரே கடைசி. அங்கிதம் கொடுக்கும்போதே தாசர் 'நீயே கடைசி. இனி யாருக்கும் அங்கிதம் கொடுப்பதில்லை' என்றார். குருகோவிந்ததாசருக்கு அங்கிதம் கொடுத்த வெறும் 20 நாட்களிலேயே சுப்பராயதாசர் இறைவனடி சேர்ந்தார்.

'தெரளிதரோ தந்தெ முத்துமோகனரோ மரளி பாரத புரி நரஹரிபுரக்கே' என்னும் கீர்த்தனையில் தாசர் கருணாமூர்த்தி யான தம் குருகளின் மகிமையை மிகவும் அழகாக வர்ணித்திருக்கிறார்.

வர சைத்ர பஞ்சமி வருஷவு விக்ரம
ஷரணர பொரெயலு கரிகிரியல்லே |
குருமுக்ய ப்ராண ப்ரதீகவ நிலிசுத
ஆரு மூரனே தின ஹரிய சேருவெனெனுதா ||

## ஞானகாரியம் - தம்பூரியைப் பெறுதல்

அங்கிதம் பெற்றபிறகு கோவிந்ததாசர், குருகோவிந்த விட்டலனுக்கு தனது பிறவியை அர்ப்பித்து, ஹரிதாசர் ஆவதற்கு தீர்மானித்தார். இங்கிருந்து குருகோவிந்ததாசரின் வாழ்க்கை திசைமாறியது. தாசர் தினமும் தினப்படி ஆன்ஹிகத்துடன், குருகள் ஆசிர்வதித்துக் கொடுத்த அங்கித பதத்தை ஜெபிக்கத் தொடங்கினார்.

கிருஷ்ணமூர்த்தி ஹ்ருதய அஷ்டதள மத்யதல்லி
த்ருஷ்டி கோசரனாகி காபாடோ ஹரியே ||1||
அபார மஹிமனே ஆபத்பாந்தவனாகி
தாபத்ரயகள கடிது காபாடோ ஹரியே |

என்று குருகள் தமக்காக ஸ்ரீஹரியிடம் வேண்டிய வாக்கியங்களை நினைத்தபோது, குருகோவிந்ததாசரின் மனதில் பக்தியும், கண்களில் நீரும் நிரம்பியது. அங்கிதத்தைக் கொடுத்து, ஹரியின் தாசனக்கிய அந்த மகானுபாவரின்

பாதத்தை வணங்கும் பாக்கியம் சிறிது நாட்கள் கூட தமக்குக் கிடைக்கவில்லையே என்று எண்ணி வருந்தினார். தன் குருகளைக் குறித்து ஒரு குரு ஸ்தோத்திரம் எழுதவேண்டுமென்ற விருப்பம் அவருக்கு வந்தது.

தந்தெ முத்துமோகன்ன தவ சரணகானமிபெ
பந்தென்ன சலஹபேகோ ||ப||

எந்தெந்திகு நிம்ம பத த்யானவித்து பவ
பந்தனவ பிடிசபேகோ கருணீ ||அப||

அங்கிதவன்னித்தெ மனபங்க ஹரிஸே ஹரி
கிங்கரர சங்க சலிஸோ |
சங்கடவ பரிஹரிப வெங்கடேசன பாத
பங்கஜக்கெ மதுபனெனிஸோ |
ஷங்கெகளு எந்தெனிப சோங்கு ஜாட்யவ ஹரிஸி
கொண்டு மன வைத்யனெனிஸோ |
மங்குபதியாதெனெகெ அகலங்க மஹிமனன
லெங்தனவனெ இத்து காயோ கருணீ ||1||

சிரகால நிம்மடிய சேவே மாடலு இல்ல
நரஹரிய பஜிசலில்ல |
மருத மதவனெ மதிஸி தரதமஞானவனு
நிருத பஜிசலு திளியதோ |
இரலு ஈ பரி நானு புருஷார்த்த படெவுதக்கெ
வரமார்க தோரோ நீனு |
ஹரகு மானவ என்ன மருகதிந்தலி நோடி
விரகுதியன்னித்து சலஹோ கருணீ ||2||

லெக்கவில்லத தேஹ கேஹாதிகள பொக்கு
சிக்கினிந்தலி நொந்தேனோ |
கக்கசத சம்சார அக்கரவு எந்தெனுத
மர்கடன தெரனாதேனோ |
சொக்கு மூரெய்தென்ன முக்கி காடுத்திரலு

நக்கு நீ நோள்பதேனோ |
பக்கிவஹ தேவ குருகோவிந்த விட்டலன
அக்கரதி தோரய்ய கருணீ ||3||

குருஸ்தோத்திரத்தை இயற்றியவுடன் அதை தனது குருவின் இருப்பிடமான தேவராயனதுர்காவிற்கு அனுப்பி வைத்தார். ஆனால், அவர் அனுப்பிய சில நாட்களிலேயே தந்தெமுத்துமோகனதாசர் பரமபதம் அடைந்தார். தாசராயரின் ப்ரிய சிஷ்யர்களில் ஒருவரான ஸ்ரீபிரகலாதவர விட்டலதாசர், சில நாட்களுக்குப் பிறகு குருகோவிந்ததாசருக்கு கடிதம் மூலமாக - உங்களில் நின்று ஹரிவாயுகள் இயற்றிய குருஸ்தோத்திரத்தை குருகள் பார்த்து மகிழ்ந்தார். நன்றாக வந்திருக்கிறது என்று கூறினார் - என்று சொன்னபோது, தாசர் மிகவும் மகிழ்ந்தார். இது குருவே தனக்குக் கொடுத்த அனுமதி என்று எண்ணி, காவியங்களை இயற்றத் தொடங்கினார்.

தந்தெமுத்துமோகனதாசரின் சிஷ்யர்களில் ஒருவரான மாகடி ரங்கப்பா என்பவர், இசைக் கருவிகளை தயாரிப்பதில் சிறந்தவராக இருந்தார். குருகளிடம் இவர் அங்கிதமும் பெற்றிருந்தார். அவரிடம் குரு - பார் ரங்கப்பா, யார்யார் தாசதீட்சை பெற்று வருகிறார்களோ, அவர்களுக்கெல்லாம் ஒரு தம்புரி செய்துகொடுப்பது உன் கடமை - என்றார். அதன்படியே இவரும் குருவிடம் தாசதீட்சை பெற்ற அனைவருக்கும் ஒரு தம்புரி செய்து, கிருஷ்ணார்ப்பணம் என்று சொல்லி கொடுத்து வந்தார். தான் பரமபதம் அடைவதற்கு முன்பே, குருகோவிந்ததாசருக்கு ஒரு தம்புரி செய்து கொடுக்குமாறு, ரங்கப்பாவிற்கு குரு ஆணையிட்டிருந்தார். இதுவே குருவின் ஆணைப்படி ரங்கப்பா செய்த கடைசி தம்புரியும் ஆயிற்று. தம்புரியை குருகோவிந்ததாசரிடம் கொடுத்தார் ரங்கப்பா. குருவின் அன்பு வடிவமாகவே குருகோவிந்ததாசர், அந்த தம்புரியைப் பார்த்தார்.

வாராவாரம் பஜனை, ஏகாதசி ஜாகரணை, தாசர் பாடல்களின் மேல் விவாதம் ஆகியவற்றைத் தொடங்கினார் தாசர். ஹரிதாச, யதிகளின் ஆராதனைக்கு அந்தந்த ஊர்களுக்குச் செல்லும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டார். அப்படிச் செல்லும்போது, தலைக்கு காவி வஸ்திரம் சுற்றி, காலில் சலங்கை கட்டி, தம்புரி ஏந்தி, ஹரிதாசர் தோற்றத்திலேயே போகத் துவங்கினார். ஹரிதாச சாகித்யத்தில் ஈடுபாடு உள்ள ஆஸ்திகர்கள் அவருடன் சேரத் துவங்கினர்.

இதற்கு நடுவில், குருகோவிந்ததாசருக்கு அவரது பரமகுருவான தொட்டபள்ளாபுர முத்துமோகனதாசரின் அருளும் கிடைத்தது. ஒருமுறை கோவிந்ததாசர், தொட்டபள்ளாபுரத்திற்குச் சென்றிருந்தபோது, முத்துமோகனதாசர் பயன்படுத்திய தம்புரி அவருக்குக் கிடைத்தது. அதை பரமகுருகள் தமக்குக் கொடுத்த அருள் என்றே தாசர் நினைத்தார். 'முத்து மோகனதாசரே நிம்ம சுத்தபாதவ நம்பிதே, சித்தி என்னய அனாத்ய வித்யெய சுத்தி நிலிஸிரி ஹரியலி' என்று கீர்த்தனையை அவரை நினைத்து இயற்றி, அதை பரமகுருகளுக்கு அர்ப்பித்தார்.

மனைவி மக்கள் அனைவரும் ஸ்ரீஹரியின் தொண்டர்கள் என்று எண்ணிய தாசர், தன் குடும்பத்தையே சாதனைக்கான வழியாக மாற்றினார். தன் தாய்க்கு 'பாரதீச ப்ரியவிட்டலா' என்றும், தன் மனைவிக்கு 'லட்சுமீச விட்டலா' என்றும் அங்கிதத்தையும், பரமப்ரியரின் சிஷ்யரான உரகாத்ரி விட்டலதாசர் மூலமாக கொடுக்கவைத்தார். முன்னரே வீட்டில் இருந்த தார்மிக செயல்கள் மேலும் வேகமடைந்தன. பின்னர் 1955ம் ஆண்டில், மைசூரில் நாகேசமூர்த்தி அவர்களின் வீட்டில் நடந்த ஸ்ரீஜகன்னாததாசரின் ஆராதனை விழாவில், உரகாத்ரி விட்டலதாசர் மூலமாக தனது மகளான அனுசுயாபாய்க்கு 'தயாநிதி விட்டலா' என்ற அங்கிதத்தைப் பெற்றுக் கொடுத்தார்.

1955ம் ஆண்டின் இறுதியில் தாசருக்கு ஹாசனிலிருந்து மைசூருக்கு வேலை மாறுதல் ஏற்பட்டது. இப்படி நடக்கும்

என்று தெரிந்து அவர் முன்பே அங்கு கிருஷ்ணமூர்த்திபுரத்தில் வாங்கிப் போட்டிருந்த ஒரு இடத்தில், வீடு கட்டியிருந்தார். அந்த வீட்டிற்கு 'ஸ்ரீகுருகோவிந்த நிவாஸ' என்றே பெயர் வைத்திருந்தார்.

## சாத்விக பழக்க வழக்கங்கள்

தாசரின் சாத்விக நடத்தையை உலகத்திற்கு தெரிவிக்கும் படியான இன்னொரு சம்பவம் நடந்தது. 1945ம் ஆண்டு கர்மபலனால் அவருக்கு சிறுநீர்க்குழாயில் ஒரு பிரச்னை ஏற்பட்டது. அதனைப் பரிசோதித்த மருத்துவர்கள் - இது மிகவும் அபாயகரமானது. உடனடியாக அறுவை சிகிச்சை செய்யவேண்டும் - என்றனர். தாசரின் மாமனாரான ஸ்ரீயாதவமூர்த்தி ராயரும் இன்னும் சில நண்பர்களும், அவரை மருத்துவமனையில் சேர்த்தனர். வீட்டிலிருந்து புறப்படுவதற்கு முன் பயம் கொண்டிருந்த தாய், மனைவி, மக்களுக்கு 'பயப்படாதீர்கள். ஸ்ரீஹரி என்னைக் காப்பாற்றுவான். பவரோகத்தையே போக்கவல்ல அவனுக்கு இந்த மனித உடலுக்கு வந்த சிறிய பிரச்னையை தீர்க்க முடியாதா? என்னும் விஜயதாசரின் வாக்கியத்தை நினையுங்கள். ஹரிவாயுகளே நம்மை காப்பாற்றுவார்கள்' என்று சொல்லிப் புறப்பட்டார்.

இவ்வளவு தைரியம் சொல்லி மருத்துவமனைக்கு வந்திருந்தாலும், தாசர் அடுத்த 2-3 நாட்களுக்கு சிகிச்சையின் காரணமாக மயக்க நிலையில் இருந்தார். வீட்டினர், தேவராயனதுர்காவிற்கும், ஸ்ரீஉரகாத்ரிவாச விட்டலதாசருக்கும் கடிதம் எழுதி, தாசரின் நிலையைத் தெரிவித்து, அவர் விரைவில் நலம்பெற அருளவேண்டும் என்று வேண்டினர்.

மருத்துவமனையில் தாசருக்கு மருத்துவம் பார்த்த மருத்துவர் கிருஷ்ணமூர்த்தி ராவ் என்பவர், தாசரின் நிலை கவலைக்கிடம் என்று தெரிவித்தார். தாசரின் மூத்த மகன் ஸ்ரீகுருராஜராவ் அவர்களை அழைத்து - 'எங்களால் முடிந்த அளவிற்கு இவரை

பிழைக்க வைக்க முயல்கிறோம். நாளை ஒரு ஊசி போடவேண்டும். அது சரியாக வேலை செய்தால், இவர் பிழைக்கலாம். இல்லையெனில் இல்லை. அந்த ஊசி கொடுக்கும்போது உடலில் 'ஆல்புமென்' என்னும் பொருள் இருக்கக்கூடாது. ஆகவே நாளை காலை ஒரு முறை இரத்தப் பரிசோதனை செய்துவிட்டு பிறகு நடக்கவேண்டியதை சொல்கிறோம்' - என்றனர். அனைவரும் பயத்தில் உறைந்தனர். அனைவருக்கும் மருத்துவனான அந்த ஸ்ரீஹரியை வணங்கினர்.

அடுத்த நாள் காலை. சிகிச்சையை தீர்மானிக்க வேண்டிய நாள். குருகோவிந்ததாசரின் எதிர்காலத்தை தீர்மானிக்கப் போகும் நாள். அவரின் இரத்தம் மற்றும் சிறுநீரை சோதித்தனர் மருத்துவர்கள். சிறுநீர் வெளியேறிருக்கவில்லை. இரத்தம் மற்றும் சிறுநீரில் 'ஆல்புமென்' இல்லை என்று தெரிவித்தனர். நம்பிக்கையுடன் அந்த ஊசியை செலுத்தினார் மருத்துவர். சரியாக அதே சமயத்தில், தேவராயன துர்காவிலிருந்தும், ஸ்ரீஉரகாத்ரிவாச விட்டலதாசரிடமிருந்தும் ஆசிர்வாத கடிதங்கள் வந்து சேர்ந்தன.

தாய் லட்சுமிபாய்க்கு ஒரே பயம். ஸ்ரீஹரியின் படத்திற்கு முன் நெய் தீபம் ஏற்றி வைத்து, ஸ்ரீபாதராஜரால் இயற்றப்பட்ட 'மத்வநாமா' சொல்லலானார். கண்ணீர் விட்டவாறு கடவுளை வேண்டினார். தாசரின் வாரிசுகள் அனைவரும் சேர்ந்து தேவரநாமாக்களை பாடலாயினர்.

இவ்வளவு ஜீவர்களின் வேண்டுதலை ஸ்ரீஹரி கேட்காமல் இருப்பானோ? மருத்துவர் கொடுத்த ஊசி உடலுக்கு பிடித்தது. சிறுநீர்க்குழாயில் இருந்த பிரச்னை தீர்ந்தது. இதனால், சிறிது நேரத்தில் உடல்நிலையும் முன்னேறத் துவங்கியது. பக்தனின் பக்திக்கேற்ப, ஸ்ரீஹரி ஒரு பெரிய கண்டத்திலிருந்து அவரைக் காப்பாற்றினான். தாசர் ஆபத்துக் கிணறை தாண்டி நலமாக வந்தார். ஸ்ரீதந்தெ முத்துமோகனரின் பரமானுக்கிரகம்,

ஸ்ரீஉரகாத்ரிவாச விட்டலதாசரின் கருணை, குருகோவிந்த தாசரின் தாயின் தவம், மற்றும் தாசரின் திடமான மனோபலம் - இவற்றினால் ஸ்ரீஹரிவாயு குருகள் கருணை காட்டி இந்த சாதனா ஜீவியை காப்பாற்றினர்.

அடுத்த இரு மாதங்கள் தாசர், மருத்துவமனையிலேயே முழு ஓய்வில் இருக்கவேண்டும் என்று மருத்துவர்கள் அறிவுறுத்தினர். அந்த ஓய்வு நேரத்தையும் பயனுள்ளதாக மாற்றிக்கொள்ள வேண்டும் என்று தாசர் நினைத்தார். ஸ்ரீவிஜயத்வஜரின் பாகவத உரையை வரவழைத்து, பாராயணம் செய்யத் துவங்கினார். மருத்து மாத்திரைகளைத் தவிர, மருத்துவமனையில் அவர் வேறு எதையும் எடுத்துக் கொள்ளவில்லை. தாசரின் மனைவியே, வீட்டில் மடி சமையல் செய்து, அவருக்கு வந்து கொடுத்துக் கொண்டிருந்தார்.

தாசர் மருத்துவமனையிலேயே குளித்து, கோபிசந்தனம் தரித்து, பாராயணம் செய்த நேரத்தில், வீட்டிலிருந்து ஸ்ரீஹரியின் தீர்த்தம், மடி உணவு வந்துகொண்டிருந்தது. அவர் அந்த இடத்திலேயே கீழே அமர்ந்து உணவை உண்டுகொண்டிருந்தார். மருத்துவமனையில் இருந்தபோதும் காலை வேளைகளில் தாசர் உதயராகம் சொல்லிக் கொண்டிருந்தார். சதாசாரத்தின்படி தன் நடவடிக்கைகளை மேற்கொண்டிருந்த தாசர், மருத்துவமனையிலும் அப்படியே இருந்தார். விடியலில் அனைவரும் எழும் முன்னரே தாசர் எழுந்து, ஸ்னானம் செய்து, உலகத்தில் ஸ்வாமியான ஸ்ரீஹரியை உதயராகத்தில் வணங்கி, சுப்ரபாதம் சொல்லி வந்தார். இவர் செயல்களால் மற்ற நோயாளிகள் தங்களின் ஆட்சேபத்தை தெரிவிக்க, இவரும் யாருக்கும் தொந்தரவு கொடுக்கக் கூடாதென்ற நல்லெண்ணத்தில், மருத்துவமனையில் வெளிப்புறத்திற்கு வந்து அங்கு உதயராகத்தைப் பாடலானார். மருத்துவர்கள் வரும் முன்னர் சரியாக தம் வேலைகளை முடித்து, தம் அறைக்குத் திரும்பிவிடுவது அவரது வாடிக்கை.

இப்படியாக இரு மாதங்களுக்கு தன் உடல்நலனை மேம்படுத்திக் கொண்டு, ஸ்ரீகுருகோவிந்ததாசர், தம் வீட்டிற்குத் திரும்பினார். வீட்டிலும் அடுத்த ஆறு மாதங்கள் ஓய்வெடுக்கும் நேரத்தில், ஸ்ரீவிஜயத்வஜ தீர்த்தரின் உரையுடன், ஸ்ரீமத் பாகவதத்தை முழுவதுமாக படித்து முடித்தார். இப்படியாக, தாசர் நேரத்தை வீணடிக்காமல், ஒவ்வொரு நொடியும் சத்சாஸ்திரங்களைப் படிப்பதிலும், அதை ஸ்ரீஹரிக்கு சமர்ப்பணம் செய்வதிலும் நேரத்தை செலவழித்தார்.

பொதுப்பணித்துறையில் சப்-ஓவர்சியராக பணிபுரிந்து வந்த குருகோவிந்ததாசர், 1949ம் ஆண்டில், பணியிலிருந்து ஓய்வு பெற்றார். அவரது ஆன்மிக வேலைகளுக்கு தற்போது முழு நேரமும் ஒதுக்கக்கூடிய சந்தர்ப்பம் வந்தது. அலுவலகத்திற்கென அணிந்திருந்த ஆடைகளை அன்றுடன் நிறுத்தினார். அவரது லௌகிக வாழ்க்கை அன்று முடிவுக்கு வந்தது. முழுமையான ஹரிதாச சேவைக்குத் தயாரானார் தாசர்.

## காணக்கிடைக்காத தாய்ப் பாசம் / பக்தி

குருகோவிந்ததாசரின் தாய்பக்தி எங்கும் காணக்கிடைக்காதது / ஒப்பிடமுடியாதது. அவர் வாழ்க்கையில் கற்ற முதல் மகாமந்திரம் 'மாத்ரு தேவோ பவ'. தாயைவிட உறவினரி ல்லை; உப்பைவிட ருசியில்லை என்னும் பழமொழியை அவர் என்றும் நினைவில் வைத்திருந்தார். இளமையில் கணவனை இழந்து, சமூகத்திடம் விதவை என்று பட்டம் பெற்று, உற்றார் உறவினரால் துரத்தப்பட்டு, தன் ஒரே மகனை வளர்க்க அவள் பட்ட பாடு தாசருக்கு மறக்கவில்லை. தாய் தன் மேல் வைத்திருக்கும் பாசத்தை நினைக்கும்போதெல்லாம் அவர் கண்கள் கலங்கினார். தன் தாயின் சேவையை தாசர் மிகுந்த பணிவு பக்தியுடன் இறுதிவரை செய்துவந்தார்.

1950ம் ஆண்டு, தாசரின் தாய் லட்சுமிபாய் நோய்வாய்ப்பட்டார். சிகிச்சை அளித்த மருத்துவர்கள், அவரின் இறுதிக்காலம் நெருங்கிவிட்டது என்று தெரிவித்தனர். தம் தாய் தனது இறுதிக் காலத்தில் கேட்கட்டும் என்ற நல்லெண்ணத்தில், பண்டிதர்களை அழைத்து 'பாகவத சப்தாஹம்' செய்வித்தார் தாசர். தினமும் தாயின் முன் ஹரிபக்திசாரம், ஹரிகதாம்ருத சாரம் ஆகிய சத்கிரந்தங்களின் பாராயணத்தை தாமே மிகுந்த பக்தியுடன் செய்து வந்தார்.

விக்ருதி நாம சம்வத்ஸரம் ஜ்யேஷ்ட பகுள த்ருதியையன்று லட்சுமிபாய் அவர்கள் இறைவனடி சேர்ந்தார். அவரின் வலது கண்ணின் மூலம் பிராணதேவர் வெளியேறினார். இந்த மாதிரி வலது கண்ணின் மூலம் உயிர் பிரிந்தவர்களுக்கு மறுபிறவி இல்லை என்று பிருஹதாரண்யக உபநிஷத்தில் சொல்லப் பட்டிருக்கிறது.

தாயின் சத்கதிக்காக, தாசர் அவரது இறுதிக்கிரியைகளை சரியாக செய்வதற்கு தகுந்த ஏற்பாடுகளை செய்தார். ' நரதேஹத்ஹவிஷ நர்பிசுவெ பரஷுராமகெ பரமப்ரீதியாகலி' என்று அக்னி அந்தர்கத பரசுராமனுக்கு லட்சுமிபாயின் உடலை ஹவிஸ்ஸாக பக்தியுடன் அர்ப்பித்தார். அப்போது தாசருக்கு ஒரு அபூர்வமான காட்சி காணக்கிடைத்தது. ருத்ரபூமியில் வைக்கப்பட்ட பலியை, எப்போதும் நடக்கும் வழக்கம்போல் காக்கை உண்ணவில்லை. அதற்கு பதிலாக, கருடன் வந்து அந்த பலியை எடுத்துச் சென்றது. அபர கர்மங்களை செய்துவந்த புரோகிதர்கள் மிகவும் வியப்புடன் - 'எங்களின் நீண்ட வாழ்க்கையில் இது போன்று ஒரு காட்சியை தாம் கண்டதில்லை. உங்கள் தாய் மிகவும் புண்ணியம் செய்தவர்' - என்று கூறினர்.

அரை நூற்றாண்டிற்கும் மேலாக தன் மகனின் நலனுக்காக தன்னையே அர்ப்பணித்த அந்த தாயின் வாழ்க்கை முடிவுக்கு வந்தது. எப்போதும் ஆன்மிகத்தில் ஈடுபட்டு, தேவ

பிராமணர்களின் சேவையில் நேரத்தை செலவழித்த உன்னத பிறவி அவருடையது. வெறும் மனிதரிடத்தில் மட்டுமல் லாமல், ஸ்ரீஹரி படைத்த அனைத்து ஜீவர்களிடத்தும் கருணை காட்டிய அவர், தம்மை கஷ்ட காலத்தில் புறக்கணித்த உற்றார் உறவினர்களையும் மன்னித்து கருணை காட்டினார்.

உரகாத்ரிவாச விட்டலரிடமிருந்து 'பாரதீஷப்ரிய விட்டலா' என்று அங்கிதம் பெற்று, மகனின் ஹரிதாச தீக்ஷைக்காக அனைத்து விதங்களிலும் உதவிகரமாக இருந்தார் அந்தத் தாய். வாழ்க்கை முழுக்க தன் கண்ணின் இரப்பைகளைப் போல், தன்னை காத்து வந்த அந்த தெய்வத்தாய் மறைந்ததும், தாசர் கண்ணீர் விட்டு கலங்கினார். ஆனால் விதியை யாரால்தான் மாற்றமுடியும்? அனைவரும் விதிவசம்தானே?

## புண்ணிய க்ஷேத்திர தரிசனம் - பத்ரி யாத்திரை

தாயின் மரணத்தால் பாதிக்கப்பட்ட குருகோவிந்ததாசர் தன் பேச்சுக்களை மேலும் குறைத்துக் கொண்டு வேலைகளில் மூழ்கலானார். லௌகிக நடவடிக்கைகளைக் குறைத்து, எப்போதும் இறைவனைப் பற்றியும், ஆன்மிகச் சிந்தனை களிலுமே மூழ்கினார். பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு செல்லத் துவங்கினார். அப்படி சென்ற இடங்களிலெல்லாம் தாயின் பெயரில் சேவை செய்தார்.

ஒரு முறை தாயின் காரியத்தை, கடிகாசல க்ஷேத்திரத்தில் செய்யவேண்டும் என்று தீர்மானித்து, அங்கு பயணம் மேற்கொண்டார் குருகோவிந்ததாசர். தாசர், ஹரிதாச பரம்பரையில் சேர்வதற்குக் காரணமாக இருந்த, ஸ்ரீதந்தெ வெங்கடேச விட்டலதாசர் மற்றும் பல தாச நண்பர்கள் அவருடன் பயணித்தனர். கடிகாசல க்ஷேத்திரத்தில் ஸ்ரீபிராண தேவரின் சன்னிதியில் காரியத்தை நடத்தி, பிராமணர்களுக்கு உணவளிக்க தகுந்த ஏற்பாடுகளை செய்தார் தாசர்.

காலையில் ஆன்ஹிகங்களுக்குப் பிறகு அனைவரும் க்ஷேத்திர தரிசனத்திற்கு புறப்பட்டுச் சென்றனர். பிராணதேவரின் மலையின் எதிரிலேயே ஒரு மலையில் ஸ்ரீநரசிம்ம ஸ்வாமியின் சன்னிதியும் உள்ளது. நரசிம்மனின் தரிசனத்திற்காக அனைவரும் தாசவேடங்களை தரித்து, மலைமேல் ஏறத் துவங்கினர். அங்கு இன்னும் அர்ச்சகர்கள் வந்திருக்கவில்லை. கோயிலின் வெளிக்கதவில் பெரிய பூட்டு பூட்டப்பட்டிருந்தது. நரசிம்மனைக் காண வந்த தாசர்கள், பூட்டிய கதவுகளைக் கண்டு விரக்தி அடைந்தனர்.

அர்ச்சகர்கள் வரும்வரை அனைவரும் ஸ்ரீஹரியின் பஜனை செய்வதென்று தீர்மானித்தனர். மூடிய கதவுகளின் முன்னரே அமர்ந்து ஹரிதாச பத்ததியில், பக்தியுடன், மெய்மறந்து பாடல்களை பாடத் துவங்கினர். நரசிம்ம சுளாதி, கீர்த்தனை, ஸ்தோத்திரங்களை, கண்ணீர் மல்க பாடிக்கொண்டிருந்த அவர்களுக்கு நேரம் போனதே தெரியவில்லை. அர்ச்சகர்கள் வந்து கூப்பிட்டபோதே அவர்களுக்கு சுயநினைவு வந்தது. அனைவரும் கண் திறந்து, அர்ச்சகர்கள் கோயில் கதவைத் திறக்க வழி விட்டனர்.

அப்போது அனைவருக்கும் ஒரு அதிசயம் காத்திருந்தது. போட்டிருந்த பூட்டு தானாகவே திறந்திருந்தது. அதைக் கண்ட அர்ச்சகர்கள் - 'மகாத்வாரத்தின் கதவுகளை யார் திறந்தீர்கள்?' - என்று கேட்டனர். அனைவருக்கும் வியப்பில் / அதிர்ச்சியில் பேச்சே வெளிவரவில்லை. தாசரின் கண்ணெதிரே நடந்த இந்த அதிசயத்தைக் கண்டதும், அவருக்கு முன்னர் ஸ்ரீபுரந்தரதாசர், கனகதாசர், விஜயதாசர் ஆகியோரின் வாழ்க்கையில் ஸ்ரீஹரி நடத்திய நாடகங்கள் கண் முன் வந்து சென்றன. அனைவரும் இன்னொரு முறை ஸ்ரீஹரியின் மகிமைகளை நினைத்துப் பாடியவாறு ஆனந்த நடனமாடினர். பிறகு நரசிம்மரின் தரிசனமும் ஆயிற்று. அங்கிருந்து பின்னர் தம் தாயின் காரியங்களை செய்துவிட்டு, தாசர், ஏழு மலைகளின் தலைவனான ஸ்ரீனிவாசனின் தரிசனத்திற்குப் புறப்பட்டார்.

இதே சமயத்தில் திருமலையின் ஸ்ரீநாராயணதாசரின் சத்திரத்தில், ஸ்ரீபுரந்தரதாசர் ஆராதனையை கொண்டாடுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. பெரியவர்களான ஸ்ரீநாராயண தாசர் மற்றும் ஸ்ரீஉரகாத்ரிவாச விட்டலதாசர்களின் வழிகாட்டுதலில், ஆராதனை விழா மிகச் சிறப்பாக கொண்டாடப்பட்டது. ஸ்ரீநாராயண தாசர், மிக சுவாரசியமாக சொற்பொழிவு ஆற்றியதுடன், பக்தியுடன் கீர்த்தனைகளையும் பாடத் துவங்கினார். மிருதங்கம் போன்ற பக்க வாத்தியங்களுடன் கச்சேரி நடந்தது. நாட்டியக் கலையிலும் அவர் தேர்ச்சி பெற்றிருந்தார். ஹரிவாண சேவையின்போது நாராயண தாசர் செய்யும் நாட்டிய சேவையைக் காண இரு கண்கள் போதாது. தலையின் மேல் நீர் நிரம்பிய ஒரு பெரிய சொம்பு, அதன் மேல் ஒரு தட்டு, அதன் மேல் ஒரு தீபம் வைத்து, கைகளில் தம்புரியுடன், சிரத்தை பக்தியுடன் பாடியவாறு, தாளத்திற்கு ஏற்ப ஆடியவாறு நாராயணதாசர் செய்யும் சேவை அற்புதமானது.

இப்படி குருகோவிந்ததாசர், பல ஹரிதாசர்களுடன் பல தீர்த்தக்ஷேத்திர யாத்திரைகளை செய்து, ஸ்ரீஹரியை கொண்டாடியவாறு, தம் வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்தையும், ஸ்ரீஹரிக்கு அர்ப்பிக்கத் துவங்கினார். பல்வேறு புண்ணிய ஸ்தலங்களை தரிசித்த அவருக்கு, பத்ரி க்ஷேத்திர தரிசனமும் செய்ய வேண்டும் என்ற பேராவல் எழுந்தது. 1952ம் ஆண்டு, குருகோவிந்ததாசர், தம் மனைவியுடன் பத்ரிக்கு செல்லத் தீர்மானித்தார்.

'கொத்து குரியில்லதே சும்மனே சுத்தி பருவ யாத்ரேயாகதிரலி' என்று ஸ்ரீவாதிராஜர், தனது தீர்த்தப் பிரபந்தத்தில் சொன்னதின்படி, ஒரு திட்டத்தின்படி யாத்திரையை செய்ய தாசர் முடிவெடுத்தார். ஒரு வரைபடத்தை வைத்துக்கொண்டு, வழியை தீர்மானித்து, தூரத்தை கண்டுபிடித்து, இந்த க்ஷேத்திரங்களில் இவ்வளவு நேரம் / நாட்கள் இருப்பது என்று நினைத்து; இந்த இடங்களில் இந்த கடவுளர்களை தரிசிப்பது என்று தீர்மானித்து - என்று சுமார் ஐந்து மாத கால நீண்ட

யாத்திரையை தாசர் திட்டமிட்டார். இந்த திட்டமிடலுக்கே தாசருக்கு 2-3 மாத காலம் தேவைப்பட்டது. இதில் குருகோவிந்ததாசரின் ஆளுமை, திட்டமிடல், தொலைநோக்குப் பார்வை, உற்சாகத்துடனான பக்தி சிரத்தை ஆகியன நன்கு விளங்குகின்றன.

பயணத்திற்குத் தேவையான பொருட்களை சேகரித்தனர் தாச தம்பதிகள். பூஜைப் பெட்டி, பாராயணத்திற்கான புத்தகங்கள், தீர்த்த க்ஷேத்திரங்களில் செய்யவேண்டிய விதிகளை விளக்கும் கையேடுகள் என அனைத்தையும் எடுத்துக்கொண்டு, தாள தம்பூரியை ஏந்தி, காலில் சலங்கையைக் கட்டி தாசர் புறப்பட்டார். தீர்த்தயாத்திரையை உபவாசத்திலேயே செய்யவேண்டும் என்ற விதியின்படி, உபவாசத்திலேயே புறப்பட்டு, தமது முதல் பத்ரியாத்திரைக்கு, சேஷசாயியான ரங்கனாதனின் அனுமதியை வேண்டுவதற்கு, மைசூர் அடைந்து அங்கிருந்து ஸ்ரீரங்கபட்டினம் வந்து சேர்ந்தார் தாசர்.

அங்கிருந்து இன்னும் பல ஹரிதாச நண்பர்களுடன் தம் குருவான ஸ்ரீதந்தெ முத்துமோகன தாசரின் அருளுக்காக தேவராயனதுர்கா அடைந்து, அங்கு ஸ்ரீநரசிம்ம தரிசனம் பெற்று, அங்கிருந்த தம் குருவின் இடமான 'தாசகூட சபாமந்திரத்திற்கு' சென்றார். அப்போது ஸ்ரீகுருகளின் ஆராதனையில் பங்கேற்பதற்காக ஸ்ரீதந்தெ வெங்கடேசதாசர், ஸ்ரீரமாகாந்த தாசர் ஆகிய தாசரின் நண்பர்கள் அங்கு வந்திருந்தனர். அந்த ஆராதனை விழாவில் பங்கேற்று, பிறகு அனைவரின் அனுமதியையும் பெற்று பதரி யாத்திரக்குப் புறப்பட்டார் குருகோவிந்ததாசர்.

குருவின் சன்னிதானத்திலிருந்து புறப்பட்ட தாசர் வரிசையாக ஹரிஹர, ஹம்பி, நவபிருந்தாவன, கதக், கொல்லாபுரம், பண்டராபுரம், பூனே ஸ்ரீவரதேந்திர தீர்த்தர் தரிசனம், மும்பை, நாசிக், த்ரியம்பக, கோதாவரி நதியின் பிறப்பிடம், தபதி நதியில் ஸ்னானம், உஜ்ஜெயினி, பிரயாகை, காசி, கயாவில் பித்ரு

காரியங்கள், ஆக்ரா, மதுரா, கோகுல, பிருந்தாவன, தேஹலி, குருக்ஷேத்திரம், ஹரித்வார, ஹ்ருஷிகேச, தேவபிரயாகை, ருத்ரபிரயாகை, கர்ணபிரயாகை, சிமூலி, பிப்பல்கோடி, கருட கங்கை, ஜோஷிமட், விஷ்ணுபிரயாகை - ஆகிய இடங்களை தரிசித்து பின் பத்ரி க்ஷேத்திரத்தை அடைந்தார்.

பதரி நாராயணனைக் கண்ட தாசர் மிகவும் அகமகிழ்ந்து பற்பல கீர்த்தனைகளை இயற்றி நாராயணனுக்கு சமர்ப்பித்தார். தப்தகுண்டம், கௌரிகுண்டம், சூர்யகுண்டம் மற்றும் அலகனந்தாவில் ஸ்னானம், தேவதார்ச்சனை, பஜனை, நர்த்தனசேவை ஆகியவற்றை செய்து, தம் தாயின் காலசிரார்த்தத்தை யதாவிதியுடன் செய்து, பதரியில் ஐந்து நாட்கள் தங்கியிருந்தார் தாசர். அங்கிருந்து திரும்பி வரும்போது நைமிஷாரண்யம், அயோத்தி, பட்னா வழியாக வந்து, கங்கையை தோணியில் தாண்டி கண்டகி நதியில் ஸ்னானம், மங்களகிரி த்ரோணாசலம், கத்வால், மொதலகல்லு, ஐஜி, உத்தனூர், சங்காபுர, வேணிசோமபுரம், மந்திராலயம், அதவானி, திருப்பதி, காஞ்சிபுரம், அருணாசலம், திருக்கோயிலூரில் ஸ்ரீரகோத்தமரின் பிருந்தாவனம், த்ரிவிக்ரம ஸ்வாமியின் தரிசனம், சிதம்பரம், ஸ்ரீமுஷ்ணம், கும்பகோணம், ஸ்ரீரங்கம், மானாமதுரையில் ஸ்ரீசத்யப்ரிய தீர்த்தரின் பிருந்தாவனம், ராமேஸ்வரம், தாமிரபரணி, தோத்தாத்ரி, சுசீந்திரம், கன்யாகுமரி, அனந்தசயன, வல்கலா ஆகியவற்றை தரிசித்து தாச தம்பதிகள் மற்றும் அவருடன் பயணித்தவர்கள் அவரவர்களின் இருப்பிடங்களை வந்தடைந்தனர்.

இந்த நீண்ட நெடிய சிறந்த யாத்திரையை குருகோவிந்ததாசர் சுமார் ஐந்து மாத காலத்தில், 8000 மைல்கள் - ரெயில், பேருந்து, வேன், கார், தோணி ஆகிய வாகனங்களில் பயணித்து, 200 மைல்களுக்கும் மேல் பாதயாத்திரையாகவே நடந்து, சுமார் 25 தீர்த்தக்ஷேத்திரங்களை தரிசித்து, பற்பல தேவதா மூர்த்திகளை தரிசித்து, பற்பல கீர்த்தனைகளை இயற்றி, ஸ்ரீஹரிக்கு அர்ப்பிக்கப்படாத பதார்த்தங்களை எங்கும் ஸ்வீகரிக்காமல்,

தினந்தோறும் மடி சமையலையே உண்டு, தேவரபூஜை, நைவேத்யங்களை நடத்தி, அனைத்தையும் குருவின் மூலமாக தனது ஆராத்ய தெய்வமான ஸ்ரீகுருகோவிந்த விட்டலனுக்கு அர்ப்பித்து, மிகவும் விமரிசையுடன் 'பதரி சமாராதனையை' செய்து, தன் பயணத்தை முடித்தார்.

ஸ்ரீகுருகோவிந்ததாசருக்கு 1954ம் ஆண்டு அறுபது வயது நிரம்பியது. அனைத்து மனிதர்களுக்கும் இந்த வயது ஒரு மைல்கல் ஆகும். ஹோமம், ஹவனங்களை வளர்த்து சஷ்டியப்த பூர்த்தி ஷாந்தி செய்துகொள்வது அனைவரின் வழக்கம். ஆனால், குருகோவிந்ததாசர் தமது சஷ்டியப்த பூர்த்தியை மிகவும் சிறப்பாகக் கொண்டாடினார். ஆசார்ய மத்வருக்கு ஸ்ரீகிருஷ்ணன் தரிசனம் கொடுத்த ரஜதபீடபுரி என்று பெயர் பெற்ற உடுப்பிக்குச் சென்று, அங்கு சுமார் 15 நாட்கள் தங்கியிருந்து, க்ஷேத்திரத்தின் சிறப்பு உற்சவங்களில் பங்குபெற்று, தம் அறுபது வயது பூர்த்தியை அங்கு கொண்டாடினார்.

1961ம் ஆண்டில், தாசர் இரண்டாம் முறையாக பதரி க்ஷேத்திரத்திற்கு பயணமானார். வழியில் இருந்த அனைத்து புண்ணிய க்ஷேத்திரங்களையும் தரிசித்தார். முதல் பதரி பயணத்தில் செய்ததைப் போலவே, ஹரிதாசரின் வேடத்தில், கால்களில் கொலுசு தரித்து, தம்புரி ஏந்தி, ஹரிநாம சங்கீர்த்தனையை செய்தவாறு, யாத்திரையை அர்த்தமுள்ளதாக ஆக்கிக்கொண்டு புண்ணியத்தை சம்பாதித்தார். பக்திரசம் ததும்பும் பல கீர்த்தனைகளை இயற்றி, தம் பிம்பமூர்த்திக்கு சமர்ப்பித்து, தாம் செய்த பெரிய யாத்திரையின் அனைத்து புண்ய பலன்களையும், தன் பிறப்பு மற்றும் வளர்ச்சிக்குக் காரணமாக இருந்த தம் தாய்க்கு சமர்ப்பித்தார். இது முடிந்து சில ஆண்டுகளில், அதாவது 1967ம் ஆண்டு ஆஷாட பகுள சதுர்த்தி திங்கட்கிழமையன்று தாசரின் மனைவியான துளசம்மா இறைவனடி சேர்ந்தார்.

# ஹயவதனனின் வருகை - விட்டலன் பிரதிஷ்டை

மனைவி இறந்தபிறகு, அபாரமான வைராக்கிய நிலையை அடைந்து, சுகதுக்கங்களை ஸ்ரீனிவாசனின் பாதங்களில் சமர்ப்பித்து பின், ஹரிகுரு ஸ்தோத்திர ரத்னங்கள் மற்றும் சத்கிரந்தங்களை இயற்றி, ஹரிதாச சாகித்யத்திற்கு பரிசாக அளித்து, நாட்டில் இருக்கும் பற்பல க்ஷேத்திரளை தரிசித்தவாறு, பற்பல அபூர்வமான ஹோம யாகங்களை செய்து, புராண புண்ய கதைகளின் சப்தாஹங்களை செய்து / செய்வித்து, அகக்கண்களைத் திறக்கும் பல உபன்யாசங்களை செய்து, ஹரிதாசர்களுடையதே ஆன ஒரு சிறப்பு வாழ்க்கையை வந்தார் தாசர். இவருக்கு ஸ்ரீஹரியின் அருள் பலவிதங்களில் கிடைத்தன. தம் பிம்பமூர்த்தியின் அபாரமான கருணையின் அனுபவத்தினால் தாசர் மனம் மகிழ்ந்தார்.

1970ல் ஒரு முறை தாசருக்கு, ஹயக்ரீவ தேவர் தமது வீட்டிற்கு வந்ததைப் போல ஒரு கனவு வந்தது. தம் இஷ்ட குருகளான வாதிராஜ ஸ்வாமிகள் வணங்கும் தெய்வமான ஹயக்ரீவ மூர்த்தியின் தரிசனம் தாசருக்கு மிகவும் மகிழ்ச்சியைக் கொடுத்தது. சில நாட்களுக்குப் பிறகு தாசர் ஈரோட்டிற்குச் சென்றிருந்தபோது, தம் நண்பரான, கருணா சம்பூர்ணவிட்டல தாசரிடம் இந்த விஷயத்தை தெரிவித்தார். அவர் மூலமாக, அந்த ஊரிலேயே வசித்து வந்த ஸ்ரீஜகன்னாத தாசரின் சிஷ்யரான மானாமதுரைதாசரின் வம்சத்தைச் சேர்ந்த ஸ்ரீபாண்டுரங்க தாசர் என்பவரின் அறிமுகம் தாசருக்குக் கிடைத்தது.

பாண்டுரங்கதாசர், தமிழ்நாட்டின் ராமனாதபுரம் ஜில்லா மானாமதுரையைச் சேர்ந்தவராவார். அவரிடம் ஜகன்னாததாசர் பூஜித்த ஹயக்ரீவதேவரின் விக்ரகம் ஒன்று இருந்தது. சங்கு, சக்கரம், கதை, அபய ஹஸ்தங்களைக் கொண்ட அந்த அழகான சிலை, மிகவும் பழங்கால விக்ரகமாகும். அதனுடன்,

வேதவியாசர் மற்றும் லட்சுமி சத்யபாமா சமேத ஶ்ரீகிருஷ்ணனின் சிலையும் அவரிடம் இருந்தன.

கடும் ஏழ்மையில் இருந்த ஶ்ரீபாண்டுரங்க தாசர், அந்த சிலைகளை ஏதாவது ஒரு கோயிலுக்குக் கொடுத்துவிட வேண்டும் என்ற நினைப்பில் இருந்தார். குருகோவிந்ததாசரின் கனவைக் கேட்டபிறகு, பாண்டுரங்க தாசர், அந்த சிலைகளை நம் தாசருக்கே கொடுக்கவேண்டும் என்று தீர்மானித்தார். சாத்விகர், ஞானவந்தர், சதாசாரங்களில் சிறந்தவர் என விளங்கிய குருகோவிந்ததாசரை விட, அந்த விக்ரகங்களைக் கொடுப்பதற்கு தகுதியானவர் வேறு யாரும் தமக்கு கிடைக்க மாட்டார் என்று பாண்டுரங்க தாசருக்கு தெரிந்திருந்தது. அதேபோல், ஒரு துளசி தளத்தை வைத்து, அந்த சிலைகளை தாசரிடம் ஒப்படைத்தும் விட்டார்.

அபரோக்ஷ ஞானியான ஶ்ரீஜகன்னாததாசரினால் பூஜிக்கப்பட்ட ஹயக்ரீவதேவர், வேதவியாசர் மற்றும் லட்சுமி சத்யபாமா சமேத கிருஷ்ணர் விக்ரகங்கள், தம்மிடம் பூஜை கொள்ள தாமாகவே வந்ததைக் கண்டு தாசர் மிகவும் மனம் மகிழ்ந்தார். இது தமது குருவருளே என்று நினைத்தார்.

தினந்தோறும் அச்சிலைகளுக்கு பூஜை செய்து, எப்போதும் பகவத் ஸ்மரணையில் இருந்து, சாதனை செய்தவாறு இருந்த குருகோவிந்த தாசருக்கு, ஶ்ரீஹரிக்கு நிரந்தரமான ஒரு பூஜையை செய்யவேண்டும் என்று ஆவல் பிறந்தது. ஒரு ஆலயத்தை நிர்மாணிப்பதைவிட நிரந்தரமான, புண்யகரமான பகவத்சேவை வேறு என்ன இருக்கிறது? இப்படியான சிந்தனை வந்தவுடன், மைசூரில் கிருஷ்ணமூர்த்திபுரத்தில் இருக்கும் தமது வீட்டிலேயே இந்த ஆலயத்தை நிர்மாணிப்பதாக தீர்மானித்துவிட்டார் தாசர். தாம் சுயமாக வாங்கிய வீடு என்றாலும், தம் வாரிசுகளின் அனுமதியைப் பெற்று, தாசரின் இஷ்ட தெய்வமான பாண்டுரங்கவிட்டலா மற்றும் கலிமர்த்தன

முக்யபிராண தேவரின் சிலைகளை பிரதிஷ்டை செய்ய சங்கல்பம் செய்தார் தாசர்.

அதன்படியே, இந்தத் திருவுருவங்களை பிரதிஷ்டை செய்வதற்கான அனைத்து ஏற்பாடுகளையும் செய்யத் தொடங்கினார் தாசர். கதக்கின் பிரபல சிற்பியான சோமண்ணா அழகான பாண்டுரங்க விட்டலனின் சிலையை செதுக்க, செகந்திராபாத்தின் ஒண்டேலு வம்சத்தினரான ஸ்ரீரங்கனாத ராயரின் வீட்டில் பூஜையை ஏற்றுக்கொண்டிருந்த மிகப் பழமையான ஸ்ரீபிராணதேவரின் சிலை ஒன்று, மிக அதிர்ஷ்டவசமாக தாசருக்குக் கிடைத்தது. ஆலய தோற்றத்திற்கேற்ப வீட்டை சரிப்படுத்திய தாசர், வீட்டிற்கு வைத்த ‘குருகோவிந்த நிவாஸ’ என்னும் பெயருக்கு தக்க பொருளைக் கொடுத்தார்.

அடுத்த நாள் மிக விமரிசையுடன் நடைபெற்ற பிரதிஷ்டாபனை விழாவில், ஸ்ரீரங்கத்திலிருந்து இதற்காகவே வந்திருந்த புரோகிதர்கள், பிரதிஷ்டையை விதிகளின்படி சரியாக நடத்திக் கொடுத்தனர். ஸ்ரீபிரமாதீச நாம சம்வத்ஸரம் வைசாக பகுள சப்தமி 24-5-1973 வியாழன் அன்று காலையில் சிம்ம லக்னம் நல்ல முகூர்த்தத்தில், பரமபூஜ்ய சாகரகட்டே மடாதீசரான ஸ்ரீ பிரத்யும்ன தீர்த்த ஸ்ரீபாதங்களவர், பாண்டுரங்க விட்டலர் மற்றும் முக்யபிராண தேவரின் பிரதிஷ்டாபனையை செய்தார்.

நாட்டின் பல்வேறு பக்தர்கள், பண்டிதர்கள், ஹரிதாசர்கள் இந்த விழாவில் பங்கேற்றிருந்தனர். 15ம் நூற்றாண்டில் ‘நவகோடி நாராயணன்’ என்று பெயர் பெற்றிருந்த ஸ்ரீபுரந்தரதாசர் தம் அனைத்து சொத்தையுமே தியாகம் செய்து ஹரிதாச தீக்ஷையை பெற்றால், இந்த 20ம் நூற்றாண்டில் ஸ்ரீகுருகோவிந்ததாசர், தம் வீட்டையே விட்டலனுக்கு அர்ப்பணித்து, மிகச் சிறந்த ஹரிதாசராக, புரந்தரதாசரின் வரிசையில் இணைந்தார்.

குருகோவிந்ததாசர் நம் கண்களிலிருந்து இன்று மறைந்துவிட்டாலும், மைசூரில் கிருஷ்ணமூர்த்திபுரத்தில் இருக்கும் 'குருகோவிந்த நிவாஸ' அவரது சாதனைக்கு சாக்ஷியாக, அவரது நினைவாக நின்றிருக்கிறது. தாசரின் சிஷ்யர்களுக்கு, அபிமானிகளுக்கு மிகவும் பிடித்தமான இடமாகவும், பாண்டுரங்க விட்டலனின் கோயிலாகவும், நித்யபூஜைகளால் ஒரு புனிதமாக இடமாகவும், இன்றைக்கும் திகழ்கிறது. தினப்படி பூஜைக்காகவென்று தாசரே நிர்மாணித்த 'விஷ்ணு தீர்த்தம்', தூய நீரைக் கொடுத்தவாறு 'குருகோவிந்த நிவாஸ'வை ஒரு தீர்த்தக்ஷேத்திரமாகவே மாற்றியிருக்கிறது.

பக்தவரதனான பாண்டுரங்க விட்டலன் தன் ப்ரியமான தூதனுடன் சேர்ந்து தாசரின் புகழைப் பரப்புவதற்காக அங்கு நின்றிருக்கிறான். தன்னை நம்பி வரும் பக்தர்களின் விருப்பங்களை நிறைவேற்றுகிறான். தாசரே நிறுவிய தர்மதர்ஷி மண்டலியினரால், இன்றும் பூஜை புனஸ்காரங்கள் மிகவும் கிரமமாக நடந்து வருகின்றன.

தாசரின் மக்கள், பேரர்கள் மற்றும் சிஷ்யர்கள், இந்த ஆலயத்தின் ஜீர்ணோத்தாரத்தையும், ஒவ்வொரு ஆண்டும் தாசரின் ஆராதனையையும், விட்டலனின் பிரதிஷ்டாபன உத்சவத்தையும் மிகவும் விமரிசையாக கொண்டாடி வருகின்றனர். அபரோக்ஷ ஞானிகளான பல யதிகளின், ஹரிதாசர்களின் ஆராதனைகள், தினந்தோறும் பாட பிரவசனங்கள் போன்ற ஞானகாரியங்கள், தாசரின் புண்ணியத்திற்கு சாட்சியாக இன்றும் தடையில்லாமல் நடந்துவருகின்றன.

## குருக்ருபா கிரந்தமாலா

ஞான காரியங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்த ஸ்ரீகுரு கோவிந்ததாசர், சத்கிரந்தங்களை இயற்றுவது மற்றும் அவற்றை வெளியிடும் செயலை தம் வாழ்க்கையில் ஒரு

யக்ஞமாகவே நினைத்து நடத்திவந்தார். தாம் நம்பிய தத்வங்களை ஒரு தலைமுறையிலிருந்து அடுத்த தலை முறைக்கு கடத்துவதற்கும், சிறந்த ஞானிகளின் வாழ்க்கையை மறக்காமல் இருப்பதற்கு கிரந்தங்கள் மிகவும் உதவி செய்கின்றன என்றும், அவற்றை படிப்பவர்களின் மனதை மேம்படுத்தி, அவர்களை சாதனையின் வழியில் அனுப்புவதற்கும் இத்தகைய கிரந்தங்கள் பயன்படும் என்று தாசருக்கு நன்கு தெரிந்திருந்தது. ஆகவே தாசர் தமது வாழ்வின் பெரும்பகுதியை இதற்காக செலவழித்தார்.

மேலும், சாஸ்திரஞானம் பெற்றிருந்த தாசர், தாம் வெளியிடப் போகும் கிரந்தங்களை, முதலில் அது எந்த விஷயத்தைப் பற்றி பேசுகின்றது என்பதை மிகவும் கவனமாகப் படித்தே பின்பு வெளியிட்டார். ஆராய்ச்சிக்காக அதிக நேரத்தை செலவழித்த தாசர், தம் வயதான காலத்திலும் பற்பல ஊர்களுக்குச் சென்று இந்த வேலையை செய்து வந்தார். அப்படி சேகரித்த விஷயங்களை, தொகுத்து, கடினமான சொற்களை பயன்படுத்தாமல், எளிய சொற்களில் அனைவருக்கும் புரியுமாறு மொழி நடை இருக்குமாறு பார்த்துக்கொண்டார்.

இத்தகைய புத்தகங்களை வெளியிடுவதற்காக குருகோவிந்ததாசர் ‘குருகிருபா கிரந்தமாலா’ என்னும் நிறுவனத்தை துவக்கி, அதன் மூலம் அவற்றை வெளியிட்டார். யாருடைய உதவிகளையும் பெறாமல், யாரிடமும் கையேந்தாமல், வெறும் குருவின் அருளினால், எப்போதும் யாராலும் மறக்கமுடியாத இந்த சாதனையை தாசர் செய்தார். ஒரு பல்கலைக்கழகம், ஒரு ஆராய்ச்சி நிறுவனம் அல்லது ஒரு மடம் இவை செய்திருக்கவேண்டிய பெரிய விஷயங்களை குருகோவிந்ததாசர் தனி ஒருவராக மேலெடுத்து குருகிருபையினால் செய்து புகழ்பெற்றார்.

தம் சாகித்ய வாழ்க்கையை துவக்கி வைத்த குருவான ஸ்ரீதந்தெமுத்துமோகனவிட்டலா என்னும் அங்கிதத்தைப் பெற்ற

நரசிபுரத்தின் ஸ்ரீசுப்பராயதாசரின் வாழ்க்கை வரலாற்றை எழுதி, 1965ல், அவரது நூற்றாண்டு பிறந்த நாள் விழாவை முன்னிட்டு, பரமப்ரியர் அங்கிதம் கொடுத்து மேம்படுத்திய ஸ்ரீரமாகாந்த விட்டலதாசருடன் சேர்ந்து வெளியிட்டார் தாசர். ஹரிதாச பரம்பரையில் த்ருவ நட்சத்திரமாக ஒளிர்ந்து, ஸ்ரீவிஜயதாசரின் பரம்பரையில் வந்த தொட்டபெள்ளாபுர ஸ்ரீமுத்துமோகன தாசரிடம் அங்கிதம் பெற்று, தாச சாகித்யத்தை அற்புதமாக வளர்த்தெடுத்து, தகுதி பெற்ற 1165 பேர்களுக்கு அங்கிதோபதேசம் செய்து, அவர்கள் மூலம் ஹரிதாச பரம்பரையை வளர்த்த ஸ்ரீதந்தெ முத்துமோகனதாசரின் சிறந்த வாழ்க்கை வரலாற்றை, நம் கண்கள் பனிக்குமாறு தாசர் எழுதினார்.

தாசரின் சரளமான, எளிமையான மற்றும் அழகான மொழி நடைக்கு சாட்சியாக இருக்கும் ‘பரமப்ரிய சுப்பராயதாசர்’ என்னும் இந்தப் புத்தகம் வேகமாக பரவி மக்களால் விரும்பி படிக்கப்பட்டது. 1978ல் இது மறுபதிப்பு கண்டது. அப்போது தாசர், தம் குருவிற்கு சம்பந்தப்பட்ட மேலும் பல விஷயங்களையும், சிஷ்யர்களின் அனுபவங்களையும் சேகரித்து அந்தப் புத்தகத்தில் சேர்த்தார். நம்பிய பக்தர்களை காப்பாற்ற தந்தெ முத்துமோகனதாசர் செய்து காட்டிய அற்புத செயல்களை மிகவும் அழகாக இந்தப் புத்தகத்தில் வர்ணித்திருக்கிறார். இந்தப் புத்தகத்தின் ஒவ்வொரு பக்கங்களிலும், தாசரின் குருபக்தி மிளிர்கிறது. தந்தெ முத்துமோகனதாசரின் மகிமைகளை மிகச் சிறப்பாக விளக்கும் இந்தப் புத்தகம், தாச சாகித்ய உலகில் இருப்பவர்களுக்கு ஒரு வரப்பிரசாதம் என்றே சொல்லலாம்.

குருகளின் வாழ்க்கை வரலாற்றை வெளியிட்டபிறகு, தாசர், தமது பரமகுருவான தொட்டபெள்ளாபுரத்தின் முத்துமோகன விட்டலா என்று அங்கிதத்தைப் பெற்ற ஸ்ரீராகவேந்திர தாசரின் வாழ்க்கை வரலாற்றையும் ‘குருகிருபா கிரந்தமாலா’ மூலமாக வெளியிட்டார். இதுவும் 1965யிலேயே வெளிவந்த நூலாகும்.

தொட்டபெள்ளாபுரத்தில் பிறந்து, பிரம்மசரியத்தைக் கடைப் பிடித்து, ஸ்ரீவர விட்டலரின் சிஷ்யராகி, முத்துமோகனவிட்டலா என்று அங்கிதத்தைப் பெற்று, அதன்மூலம் பல உகாபோகம், சுளாதி, கீர்த்தனைகளை இயற்றினார், ஸ்ரீராகவேந்திர தாசர். தமது கிராமத்தில் விட்டலனை பிரதிஷ்டை செய்வதற்கு இவர் பட்ட சிரமங்கள் போன்ற பல விஷயங்களை தனது சிறிய புத்தகத்தில் விளக்கியிருக்கிறார் தாசர். அளவில் சிறியதானாலும், படிப்பவர்களுக்கு இந்தப் புத்தகம் தரும் அனுபவம் அலாதியானது. இந்தப் புத்தகத்தின் விஷயங்களை சேகரிப்பதற்காக தாசர் செய்த முயற்சிகளும் அபாரமானவையே. ஆராய்ச்சியில் தாசருக்கு இருந்த ஈடுபாடும், கிடைத்த விஷயங்களை அழகாக விவரிக்கும் இவரின் பாங்கும் கவனிக்கத்தக்கவை.

## ஹரிபக்தி விஜயம்

ஹரிபக்தி விஜயம் என்னும் பெயரில் குருகோவிந்ததாசர், ஹரிதாச சாகித்ய உலகிற்கு அளித்த பரிசு மிகவும் அற்புதமானது. தாச சாகித்யத்தை பயில்பவர்கள் என்றைக்கும் மறக்கக்கூடாத உதவியை, இந்த தொகுப்புகளை வெளியிட்ட தன் மூலம் தாசர் செய்திருக்கிறார். பேலூர் கேசவதாஸ் வெளியிட்ட ‘கர்னாடக பக்திவிஜய’த்தில் இருப்பவர்களைத் தவிர, இன்னும் பிரபலமாகாத, வெளிவந்திருக்காத ஹரி தாசர்களின் வாழ்க்கை வரலாறு, சாதனை மற்றும் அவர்களின் சாகித்ய பங்களிப்பு ஆகியவற்றை வெளியிட்ட தொகுப்பு என்றால் அது குருகோவிந்ததாசர் வெளியிட்டிருக்கும் ஹரிபக்தி விஜயம் புத்தகம் ஒன்றுதான்.

இந்த தொகுப்பில் மொத்தம் ஏழு புத்தகங்கள் உள்ளன. ஒவ்வொரு புத்தகமும் மிக அரிய தகவல்களைக் கொண்டு, ஹரிதாச சாகித்யங்களை படிப்பவர்களுக்கு ஒரு வழிகாட்டியாக இருக்கிறது. பிரபலமாகாத பல ஹரிதாசர்களின் வாழ்க்கை சரிதத்தை, அவர்களது சாகித்யங்களைப் பற்றிய

தகவல்களை தாசர், தமது உடல்நிலையையும் கவனிக்காமல் பல இடங்களில் போய் சேகரித்து வந்தார். அவர்கள் வாழ்ந்த, மறைந்த, இருந்த இடங்களுக்கு தாமே சுயமாகச் சென்று வந்திருந்தார்.

பெரியவர்களின் வம்சத்தில் வந்திருந்தாலும் அனைவருக்கும் அதே மாதிரியான சிந்தனை, அறிவு இருக்கவேண்டும் என்பது அவசியம் இல்லைதானே? நம் தாசர் கேட்ட கேள்விகளுக்கு, சில ஹரிதாசர்களின் வீட்டில் அவர்களுக்குத் தெரிந்த வகையில் பதில்களைக் கூறினர். தங்களிடம் இருக்கும் கையெழுத்துப் பிரதிகளைக் கொடுத்து உதவினர். வேறு சிலர் இவரை புறக்கணித்தனர். இன்னும் வேறு சிலர், மகாஞானி களின் கையெழுத்துப் பிரதிகளை அச்சிட்டு வெளியிடுவதே பெரிய பாவம் என்பதுபோல, அவற்றைக் கொடுக்க மறுத்தனர். ஆனால் தாசர் அந்த மாதிரி சமயங்களிலும் தன் நோக்கத்தை விடவில்லை. வம்சத்தில் வந்தவர்களுக்கே ஆர்வம் இல்லாதபோது, நமக்கு இது எதற்கு என்று எண்ணவில்லை.

ஞானிகள் இயற்றிய பாடல்கள் என்னும் விளக்கு அணையக்கூடாது, சம்சாரம் என்னும் இருட்டினை இந்த ஞானிகளின் கிருதிகள் என்னும் விளக்கினாலேயே போக்கமுடியும் என்று திடமாக நம்பினார். அதற்காக, அவர் அந்த வம்சத்தினரின் வீட்டிலேயே தங்கி, பல நாட்கள் பேசி அவர்கள் மனதை மாற்றி, தன் வேலையை சாதித்து வந்தார். ஹரிதாச சாகித்ய ஆராய்ச்சியில் தாசருக்கு இருக்கும் அபாரமான சிரத்தை மற்றும் உற்சாகத்தை இது காட்டுகிறது. தம் பரம்பரையில் இருப்பவர்களின் மேல் தாசருக்கு இருக்கும் மரியாதை மற்றும் அவர்கள் அளித்த கிருதிகள் என்னும் மாபெரும் பரிசினை அடுத்து வருபவர்களுக்குக் கொடுக்கவேண்டும் என்னும் ஆர்வம் - இவை தாசரின் நடவடிக்கைகளிலிருந்து தெரியவருகிறது.

தாசரின் களங்கமில்லா மனம், அவரின் பார்வை என அனைத்துமே இந்த ஹரிபக்தி விஜய புத்தகங்களிலிருந்து தெரியவருகிறது. தாச சாகித்ய ஆராய்ச்சியாளர்கள் பலர் சேர்ந்து செய்யவேண்டிய செயல்களை, தாசர் ஒருவராக, எந்தவொரு நிறுவனத்தின் உதவியும் இல்லாமல் செய்து, தாச பரம்பரைக்கு மிகப்பெரிய உதவியை செய்திருக்கிறார்.

இந்த தொகுப்பினில் மொத்தம் 22 தாசர்களின் வாழ்க்கை வரலாற்றை விளக்கியிருக்கிறார். பாவி-சமீரரான ஸ்ரீவாதிராஜர், விஷ்வப்ரியர் மற்றும் மாதனூர் விஷ்ணு தீர்த்தரும் இந்தப் புத்தகத்தில் இருக்கின்றனர். ஸ்ரீவர தாசரில் துவங்கி ஸ்ரீவியாசவிட்டலா வரை தமது பரம்பரையில் உள்ள ஏழு பேரின் வரலாற்றினையும் தாசர் வெளியிட்டது மிகவும் அற்புதமான செயல். இந்தப் புத்தகங்களின் வடிவமைப்பு மிகவும் அழகானது. புகைப்படங்கள், அவர்களின் அபூர்வமான கிருதிகள் என தகவல்களைக் கொடுத்தது, பின்னர் வரும் ஹரிதாசர்களுக்கு / படிப்பவர்களுக்கு தாசர் செய்த பேருதவியாகும்.

மோகனதாசர், சிக்கேரஹள்ளி திம்மண்ணதாசர், பிரசன்ன வேங்கடதாசர், விஜயராமசந்திர விட்டலதாசர், ஜெயேஷ விட்டலதாசர், மணூர ஹனுமந்த தாசர், ஹரபனஹல்லி பீமவ்வா, ஏரி சேஷாசார்யர், பாண்டுரங்கி ஹுச்சாசார்யர் ஆகிய பகவத்பக்தர்களின் வரலாற்றினை ஹரிபக்தி விஜய தொகுப்பினில் மிகவும் சரளமான நடையில் தாசர் வெளியிட்டிருக்கிறார். தம் சிஷ்யனான ஸ்ரீமுரளி வினோத விட்டலா என்னும் அங்கிதத்தைப் பெற்ற ஸ்ரீஸ்வாமி ராயாசார்யரிடமிருந்து, ஸ்ரீராகவார்யரின் வாழ்க்கை வரலாற்றை, மற்றும் இன்னொரு சிஷ்யரான ஸ்ரீககவரத்வஜ தாசரிடமிருந்து ‘ஹரிதாச பரம்பரை மற்றும் பரமப்ரியரின் அற்புத செயல்கள்’ என்னும் புத்தகத்தை எழுதவைத்து, அதை ஹரிபக்தவிஜயத்தில் சேர்த்து வெளியிட்டார்.

இந்தப் புத்தகத்தில் வந்த தகவல்களைப் பெற தாசர் செய்த ஆராய்ச்சிகள், அவர் காட்டிய உற்சாகம் ஆகியவை மிகவும் மெச்சத்தக்கவை. ஹரிதாச சாகித்யத்தில் 'ஹரிபக்தி விஜயம்' தொகுப்பு ஒரு விலைமதிப்பில்லா பொக்கிஷமாகும்.

## உபநிஷத்களின் மொழிபெயர்ப்பு

ஆசார்ய மத்வர் பாஷ்யம் எழுதிய பத்து உபநிஷத்களான ஐதரேய, ஈசாவாஸ்ய, தலவகார, தைத்திரிய, மாண்டூக, அதர்வண, ஷட்ப்ரஸ்ன, காடக, சாந்தோக்ய மற்றும் பிரஹதாரண்யக உபநிஷத்களை, மூலம் மற்றும் பாஷ்யம் இரண்டையும் வெளியிட்டு, அவற்றின் மொழிபெயர்ப்பினையும் மிக சரளமான கன்னடத்தில் எழுதியிருக்கிறார். இது ஹரிதாச சாகித்யத்திற்கு மற்றும் மொத்த கன்னட சாகித்ய உலகத்திற்கும் தாசர் செய்த மிகப் பெரிய உதவியாகும். இதில் வியாஸ மற்றும் தாச சாகித்யத்தின் இனிமையான சங்கமம் ஏற்பட்டிருக்கிறது.

தாசர் பயன்படுத்தியிருக்கும் நடை எவ்வளவு எளிமையாக இருக்கிறதென்றால், எத்தகைய கஷ்டமான விஷயமும் இவரது நுடிகளிலிருந்து எளிதாக புரிந்து கொள்ளக்கூடியதாக இருக்கிறது. தத்வ சுவ்வாலியைப் போன்ற நடை ஆகட்டும், ஷட்பதி ஆகட்டும், தாசர் மூலத்தின் பொருளை சிதைக்காமல் அப்படியே சொல்லியிருக்கிறார். இந்த அனைத்து உபநிஷத்களில் இடையிடையே சொல்லப்பட்டிருக்கும் தத்வங்களான ஹரி சர்வோத்தமத்வம், வாயு ஜீவோத்தமத்வம், பஞ்சபேதம், தாரதம்யம் ஆகியன, தாசரின் கன்னட மொழிபெயர்ப்பிலும் அப்படியே வந்திருக்கின்றன.

உபநிஷத்களின் துவக்கத்தில் தாசர் இயற்றியிருக்கும் மங்களாசரண ஸ்லோகங்கள் மிகவும் அழகானவை. மொத்த உபநிஷத்தின் சாரமே மங்களாசரணத்தில் அடங்கியிருக்கிறதோ என்று எண்ண வைக்கிறது. மத்வரின் மூல பாஷ்யத்தில் உள்ள மங்கள ஸ்லோகங்களின் பொருளை கொஞ்சமும்

சிதைக்காமல் மொழிபெயர்த்திருக்கும் தாசருக்கு கன்னட மற்றும் சம்ஸ்கிருதம் என இரு மொழிகளிலும் மெச்சத்தக்க பாண்டித்யம் இருக்கிறது. மொழித்திறனுக்கு ஏற்ற சொற்களை, சந்தர்ப்பத்திற்கு ஏற்ப பயன்படுத்தும் திறன், இப்படிச் செய்வதற்கான அறிவு - என இவை அனைத்தும் தாசருக்கு கைகூடியிருந்தன.

மொழிபெயர்ப்பிற்கு சரியான முன்னுரையைக் கொடுத்து, பொருளுடன் அதை விளக்கி ஸ்ரீசர்வக்ஞாசார்யர் மற்றும் ஸ்ரீராகவேந்திர குருசார்வபௌமர் காட்டிய ராஜவழியில் பீடுநடை போட்டு, உபநிஷத்களின் உள் அர்த்தங்களை சாதாரண மக்களுக்கும் போய் சேருமாறு, தமதே ஆன தனி நடையில் இயற்றியிருப்பது தாசரின் திறனை எடுத்துக்காட்டுகிறது.

தாசர் செய்திருக்கும் உபநிஷத்களின் மொழிபெயர்ப்பு வேலையில், கவனத்தில் கொள்ளத்தக்க இன்னொரு விஷயம் என்னவென்றால், ஒவ்வொரு உபநிஷத்களுக்கும் துவக்கத்தில் எழுதியிருக்கும் முன்னுரையாகும். இவை கிரந்தத்திற்கு கிரீடம் போல் அழகாகவும், படிப்பவர்களுக்கு நல்ல வழிகாட்டியாகவும் நின்று, சொல்ல வந்த பொருளை எளிமையாகவும், தெளிவாகவும் எடுத்துச் சொல்கின்றன. உபநிஷத்தின் பொருள், நோக்கம் மற்றும் சிறப்பினை அழகாக விளக்கும் இந்த முன்னுரைகள் மொத்த உபநிஷத்தின் சாரமாகவும் விளங்குகின்றன.

ஸ்ரீஹரியின் மகிமைகளையும், ஜீவனின் அ-ஸ்வதந்த்ரத்தையும் ஒவ்வொரு இடத்திலும் விளக்கியிருக்கும் தாசர், இந்த உபநிஷத்தின் மொழிபெயர்ப்பினை மிகுந்த சிரத்தையுடன், கவனத்துடனும் செய்திருந்தாலும், தாம் இதை இயற்றினோம் என்னும் கர்வத்தை எங்கும் வெளிக்காட்டவில்லை. இதை தம்மிடம் செய்விப்பவர், தத்வாபிமானி தேவதைகள் மற்றும் தன்னை மேம்படுத்திய குரு - பரமப்ரிய முதலான பல விருதுகளைப் பெற்றிருப்பவரான தந்தேமுத்துமோகனதாசரே -

என்கிறார். இவர்கள் இல்லையெனில், தாம் எங்கே? ஞானானந்தமயமான மத்வ சாஸ்திரங்கள் எங்கே? இதெல்லாம் குரு அந்தர்யாமியாக இருப்பவரின் செயலே ஆகும் என்கிறார் தாசர்.

அர்த்த கன்னடதல்லி | விஸ்தரிப கார்யதலி
தத்மானிகளு என்னல்லி | என்னல்லி நிந்து பர
மார்த்தகளனே நுடிசாலி ||

மத்வசாஸ்திரத ஞான | சுத்த மந்தனிகெந்து
முத்துமோஹனரா சிஷ்யாரு | சிஷ்ய மம குரு தந்தெ
முத்து மோஹனனே நுடிசாலி ||

குருகளலி தா நிந்து | பரமார்த்த போதிசுவ
குருவந்தராத்மா பேடாவெ | பேடுவே தவ பாதாப்ஜ
குருகோவிந்த விட்டலா பாலிஸோ ||

என்று தமக்கே உரிய சிறந்த நடையில், குருகோவிந்ததாசர், தச உபநிஷத்களை மொழிபெயர்த்து, படிப்பவர்களுக்கு அருளியிருக்கிறார். சிறப்பு அர்த்தங்களை விவரிப்பதற்கு அங்கங்கு பிரம்மசூத்ரங்களை உதாரணம் கொடுத்து, தகுந்த இடங்களில் ஹரிதாசரின் பாடல்களின் விளக்கங்களைக் கொடுத்து, இதில் ஈடுபாடு கொண்டவர்களுக்கு ஒரு அமிர்தமயமான உணவையே அளித்திருக்கிறார்.

ப்ராக்ருதவு என்னதிரி ஹரி அ
ப்ராக்ருதன மஹிமோக்திகளு
ஸ்வீக்ருதவே சரி பாவகொலியுவனெந்து பேளிஹரு |
ஈ க்ருதியு வேதோக்த பாவவ
ப்ராக்ருததி அனுசரிசுதலி ஆ
ர்யோக்திகள பேளிஹது சம்ஸ்க்ருதவல்ல தின்னேனு ||

என்று கேட்கும் தாசர், 'பாவக்கே ஒலிவ விஜயவிட்டலா' என்று தம் சுளாதியில் சொல்லும் விஜயதாசர், அவன் பாஷைக்கு

தரிசனம் அளிப்பான் என்று எங்கும் சொல்லவில்லை. ஆகையால், மொழி கன்னடம் என்று ஏளனம் செய்யாமல், ஸ்ரீஹரியின் அருளைப் பெறவேண்டும் என்ற இச்சை உள்ளவர்கள், இந்த கிரந்தங்களை சுத்தமான மனதோடு படிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறார்.

## தேவர நாமாக்கள்

தமது குரு கொடுத்த அங்கித உபதேசத்தை / தாசதீட்சையை பெற்ற ஹரிதாசர்கள் தமது பிம்ப மூர்த்தியிடம் வேண்டிக்கொள்வதின் தொகுப்பே தேவர நாமாக்கள் அல்லது கீர்த்தனைகள். இதில் சுளாதிகள், உகாபோங்கள் ஆகியவும் சேர்கின்றன என்றாலும், கீர்த்தனைகளின் இடமே பெரியது. பக்தன் ஒருவனின் வேண்டுகோள், அவனது மனதிலிருந்து வெளிப்படும் ஆதங்கங்கள், மொத்த பக்தர்களின் குரலாக, சமூகத்தை திருத்தும் குரலாக கீர்த்தனைகள் இருக்கின்றன. ஸ்ரீநரஹரி தீர்த்தரிடமிருந்து துவங்கி, ஹரிதாச பரம்பரையில் தம்மை அடையாளப் படுத்திக்கொண்ட பல யதிகள், புரந்தரதாசர் முதலான பல ஹரிதாசர்கள், இந்த மிகச்சிறந்த வழியினை மிகவும் அழகாக வளர்த்தனர். ஸ்ரீவிஜயதாசரின் பரம்பரையில் வந்த ஸ்ரீகுருகோவிந்ததாசரும் இதற்கு விதிவிலக்கல்ல.

ஸ்ரீகுருகோவிந்த விட்டலா என்னும் அங்கிதத்தில் தாசர் சுமார் 700 கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார் என்று தெரிகிறது. இதைத்தவிர தமது சிஷ்யர்களுக்கு அங்கிதம் கொடுத்து, உபதேசித்தன் மூலம் இயற்றிய ‘அங்கித நாமா’வின் எண்ணிக்கை 250க்கும் மேல். சிஷ்யர்களின் மற்றும் பக்தர்களின் துக்கத்தைப் போக்க எழுதிய கிருதிகளும் அதிகமானவை. அவர் வெளியிட்ட ‘தேவர நாமாவளி’ புத்தகத்தில் இருக்கும் வேறு பல கீர்த்தனைகளும் உண்டு.

தமது சிஷ்யர்கள் மற்றும் பக்தர்களின் பயன்பாட்டிற்காக தாம் இயற்றிய கீர்த்தனைகளை தாசர் தாம் இருக்கும்போதே இரு பாகங்களாக அச்சிட்டு வெளியிட்டார். ஹரிதாச சாகித்யத்திற்கு இவர் செய்த மிகப் பெரிய உதவி இது. ஆராய்ச்சிப் பணியிலும் தாசர் ஈட்டுபட்டிருந்ததால், தமக்குப் பிறகு தாம் இயற்றிய கிருதிகள் மறைந்துவிடக்கூடாது என்னும் நல்லெண்ணத்தில், அவற்றை வெளியிடுவதற்கு பின்வரும் சந்ததியினருக்கு பொறுப்பைக் கொடுக்காமல் தாமே அதை நடத்தினார்.

தம் கீர்த்தனைகளை தாமே வெளியிட்டதற்கான காரணத்தை ‘தேவர நாமகளு பாகம் - 1’ல் தாசர் இவ்வாறு சொல்லியிரு க்கிறார். ’தாச தீக்ஷையைப் பெற்று, குருவருளின் பலத்தினால் சிலர் முந்தைய சம்பிரதாயத்தையே பின்பற்றி, ஹரிகுருகளை புகழ்ந்து பாடும் ஸ்தோத்திரங்களை இயற்றி, தாளத்துடன் ஒரு பாடலாக தம் இஷ்டத்திற்கு தானே பாடிக்கொண்டு மகிழ்ச்சியடைவது நாம் அனைவரும் காணும் காட்சியாகும். அவற்றை அச்சிட்டு வெளியிடுவதும் அவரின் கடமையே. இயற்றியவருக்கு அவரது கையெழுத்துப் பிரதியே போதும். சிஷ்யர்கள் மற்றும் இதரரின் நலனுக்காக அவற்றை வெளியிடுவது மிகவும் அவசியமானதாகும். தற்போதைய இயந்திரத்தனமான, வேகமான வாழ்க்கையில், பாடலை ஒருவரிடமிருந்து எழுதிக்கொண்டு இன்னொருவர் படிப்பது / பாடுவதென்பது முடியாத காரியம். இத்தகையவர்களுக்காக இவற்றை வெளியிடுவது மிகவும் தேவையானதாகும்’.

’இதில் வெளியிடப்பட்டுள்ள கீர்த்தனைகள் பக்திப் பாடல்களாக, இந்த நிறுவனத்தின் பெயரைக் காக்கும் வண்ணம், வர்ணாபிமானிகளின் அந்தர்யாமியான தத்வாபிமானி மற்றும் ஹரிவாயுகள் சொன்னதைப் போல இயற்றப்பட்டு, அவர்களால் சொல்லப்பட்டு எழுதப்பட்டவை. சங்கீதத்தின் வாசனையே அறியாத இவனுக்கு ராகம், தாளம், லயம் ஆகியவற்றின் ஞானம் எப்படி வந்தன? ஒரு உதாரணம் வேண்டுமானால் கொடுக்கலாம். ராமாயணத்தில் கடலைத் தாண்டும்

சந்தர்ப்பத்தில், ஜாம்பவான் சொன்னதைப் போல, அங்கதன் முதலான வானரங்கள் தங்களின் வலிமையைக் கூறினர். இதைப் போல நம் சிஷ்யர்களும் இந்த கிரந்தங்களை கொண்டு வருவதற்கு தங்களாலான உதவிகளை செய்திருக்கின்றனர். வெளியிடுவதற்கு, வெளியிட்டதை பரப்புவதற்கு என அனைத்திலும் இவர்கள் உதவியதால், இந்த பதிப்பாளன் எந்த வித சிரமமும் இல்லாமல் இந்தப் புத்தகத்தை 20வது புத்தகமாக நமது குருகிருபா கிரந்தாலயத்தின் மூலமாக வெளியிட்டிருக்கிறான்'.

இதிலிருந்து தாசரின் ஆளுமை நன்றாகத் தெரிகிறது. தாம் இயற்றிய கீர்த்தனைகளை அனைவரும் படிக்கவேண்டும் என்பதோடு மட்டுமல்லாமல், இதை ஒரு பகவத் சேவையாகவே நினைத்து செய்திருக்கிறார்.

தாம் இயற்றிய பாடல்களை தாசர், ஹரிதாச பத்ததியைப் போல, தாரதம்ய முறையிலேயே வெளியிட்டிருக்கிறார். தாசர்கள் யதிகள் ஆகியோரின் பாடல்களை முதல் பாகத்திலும், தேவதைப் பாடல்களை இரண்டாம் பாகத்திலும் வெளியிட்டிருக்கிறார். முதல் பாகத்தின் துவக்கத்தில் தமது பிறப்பிற்கு காரணமான பெற்றோரை மிகவும் பணிவுடன் வணங்கியிருக்கிறார். சாதனை சரீரத்தைக் கொடுத்த பெற்றோரை எவ்வளவு நினைத்தாலும் அதில் திருப்தி வருவதில்லை. ஷட்பதியில் இயற்றப்பட்டிருக்கும் 'ஆ நமிபே மாதெ பிதரர்க' மற்றும் 'நமிசுவேனு மன்மாதெ பதயுகளகளக்கெ' என்னும் கீர்த்தனைகளில் தம் பெற்றோரை புகழ்ந்திருக்கிறார். அவர்களின் விரத, நியம, நிஷ்டைகளை அதில் விவரித்திருக்கிறார்.

நமோ நமோ ஜபதபானுஷ்டாதெ விக்யாதே
நமோ நமோ ஷாந்தாம்மா சுதாந்தெயே
நமோ நமோ பரரிகுபகாரி விரதசாரி ஹஸித்ருஷெகளம் கெல்தளே ।

நமோ நமோ பதிவ்ரதெ ஹரிகுரோபக்தியுதெ
நமோ நமோ பாரதீஷ ப்ரியகபின்மாத்ம
நமோ நமோ கோவிந்த விட்டலன தாசதாசியரிகெ நமோ எம்பேனு ||

என்று அவரது வம்சத்தின் விவரங்களை, சிறிய வயதில் தன் கணவனை இழந்து தன்னை தனியாக வளர்த்தெடுக்கப் பாடுபட்ட தாயை தாசர் தம் பாடல்களில் மிகவும் பணிவுடன் புகழ்ந்திருக்கிறார்.

குருகோவிந்ததாசரின் குருபக்தி அற்புதமானது. தனது சாதனைகள் அனைத்தும் தனது குருவிற்குப் பிறகே. 'ஏனு பந்தரு குருவின மூலகவே பரலி' என்றார். தமக்கு அங்கித உபதேசம் செய்து தமது ஸ்வரூப உத்தாரகத்திற்கு காரணமான ஸ்ரீதந்தெமுத்து மோகனதாசரை சுமார் 24 பாடல்களில் தாசர் ஸ்தோத்திரம் செய்திருக்கிறார். இந்த அனைத்து பாடல்களிலும் தாசரின் குருபக்தி, குருவின் சிஷ்யபாசம், கருணை, பவ்யம், பாண்டித்யம், ஞானதிருஷ்டி, விரக்தி ஆகியவைகளை விவரித்திருக்கிறார். இதேபோல, தம் பரமகுருவான தொட்டபள்ளாபுர முத்துமோகனதாசரைக் குறித்தும் ஐந்து கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார். தம் பரமகுருவைக் குறித்து இயற்றியிருக்கும் கீர்த்தனையில்:

தம்ப்ரூஹி எனுவந்த தம்பூரி நீ கொடுத
தும்பித் வைபவதிந்த பொரெதெ முததிந்தா ||

என்று சொல்லும் வரிகள் கவனிக்கத்தக்கவை.

ஹரிதாச சதுஷ்டயர் என்றே பிரபலமான ஸ்ரீஜகன்னாததாசர், ஸ்ரீகோபாலதாசர், ஸ்ரீவிஜயதாசர் மற்றும் ஸ்ரீபுரந்தரதாசர் மட்டுமல்லாமல் விஜயதாசரின் வளர்ப்பு மகனான மோகனதாசர் மேலும், ஸ்ரீகுருகோவிந்ததாசர் பாடல்களை இயற்றியிருக்கிறார். ஒவ்வொரு ஹரிதாசரின் அருமை பெருமை மகிமைகளை, நம் கண்கள் கலங்குமாறு, சிறிய

வாக்கியங்களில் விளக்கி, நம் பிறவியின் பொருளை நமக்கு புரியவைக்க முயன்றிருக்கிறார் தாசர்.

வாசவநாமக தாசர நெரெ நம்பு |
ஞான பகுதி தும்பு காசுகளிஸி
கோடீஷ்வரனெனிஸிதனா சர்வவு செல்லிதனா

என்று ஸ்ரீபுரந்தரதாசரின் மிகச்சிறந்த வைராக்கியத்தை - சர்வவு செல்லிதனா - என்னும் சொற்களில் மிகவும் அழகாக தாசர் வர்ணித்திருக்கிறார்.

யதிகளின் பரம்பரையில், தம்முடைய சமகாலின மற்றும் முந்தைய பிரபல யதிகள் என அனைவரின் மேலும் தாசர் கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார். அடவி ஆசார்யர் என்று புகழ்பெற்ற விஷ்ணுதீர்த்தர், சாவனூரின் சத்யபோதர், கல்பவிருக்ஷ காமதேனுவான மந்திராலயத்தின் ஸ்ரீராகவேந்திரர், பாவி-சமீரரான ஸ்ரீவாதிராஜர், வியாசராஜர், ஸ்ரீபாதராஜர், பிரம்மண்யதீர்த்தர், புருஷோத்தமதீர்த்தர், டீகாக்ருத்பாதரான ஸ்ரீஜயதீர்த்தர், ‘அத்வைதாரண்ய ப்ரத்வம்ஸானல’ ஆன ஸ்ரீமன் மத்வாசார்யர் - என அனைவரையும் தாசர் மிகவும் விசேஷமாக தம் வரிகளில் புகழ்ந்திருக்கிறார். மத்வராயரைக் குறித்து ‘நின்ன நானெம்பேனோ’ என்னும் கீர்த்தனையை பார்க்கலாம். இதில் வாயுதேவரின் மூன்று அவதாரங்களையும் பாடியிருக்கிறார்.

காசவ தரிஸி நிஷாசர சம்ஹாரி
யாசகனாகி பிக்ஷான்னவ மெல்லுத
ஈ சராசரக்கெல்லா கர்து ஹரியெ எந்து
நீசோச்ச தரதம பேள்தெ எந்தல்லதெ ||

கேசர நீனெந்தனெ - விராடனோள்
பாசக நீனெந்தனெ - பவாடவி
மோசகனே குரு கோவிந்த விட
லார்சகனெந்து ஸ்துதிகெய்தெனல்லதெ ||

நிந்தா ஸ்துதியின் சாயல் இருந்தாலும் இதில் கேலி இல்லை; கர்வம் இல்லை; மாறாக தூய நகைச்சுவை, பக்தி இருக்கிறது. புண்ணிய நதிகளான நர்மதா, காவேரி, கோதாவரி, கங்கையைக் குறித்து தாசர் பிரார்த்தனை ரூபத்தில் கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார்.

'தேவர நாமகளு' இரண்டாம் பாகத்தில் குருகோவிந்ததாசர் தேவதா வகுப்பில் கீர்த்தனைகளை, தாரதம்யத்திற்கேற்ப வெளியிட்டிருக்கிறார். இதில் தாசர், விநாயகரிடமிருந்து துவங்கி, நாராயணன் வரை பக்திரசம் ததும்பும் கீர்த்தனைகளை இயற்றி, மெய்மறந்து பாடியிருப்பதைக் காணமுடிகிறது. சீரிய நடை, பொருள் பொதிந்த உவமைகள், சிறந்த மொழித்திறன், காவிய அழகு - ஆகியவற்றைக் கொண்ட குருகோவிந்ததாசரின் கீர்த்தனைகள் ஹரிதாச சாகித்யத்தில் மிகச்சிறந்த இடத்தைப் பெற்றிருக்கின்றன.

கணபதி, ருத்ரபத்னியான பார்வதி, ககபத்னியான சௌபர்ணி, சேஷ பத்னியான வாருணி, அளகிரிரங்கனின் மனைவியான துளசி, ஷன்மஹிஷியரான லக்ஷ்ணா, மித்ரவிந்தா, நீளா, காளிந்தி, பத்ரா மற்றும் ஜாம்பவதி ஆகிய தேவியரை பலவிதமாக புகழ்ந்து பாடியிருக்கிறார் தாசர்.

பவனாந்தராத்ம குருகோவிந்த விட்டலன
பாவன்ன பதகாம்ப ஹவணி திளிசம்மா ||

வைஷ்ணவரான ருத்ரதேவரைக் குறித்து தாசர் சுமார் 29 பாடல்களைப் பாடியிருக்கிறார். மிகுந்த பொருட்செறிவுள்ள இப்பாடல்கள் மிகவும் சிறப்பானவை. ருத்ரதேவரை வணங்கியபிறகு, தாசர் ஜீவமானியான சேஷதேவரை, வாயுதேவரின் பத்னியான பாரதிதேவியை மற்றும் பிரம்மனின் பத்னியான சரஸ்வதியைக் குறித்து பாடல்கள் எழுதியிருக்கிறார். 'சாரதே மஜ்ஜனனியே, ஹம்ஸவாஹன

ஜாயே, சரோஜதள நேத்ர' போன்ற வாக்கியங்களில் தாசரின் புலமை வெளிப்படுகிறது.

ஜீவோத்தமரான பிராணதேவரை தாசர் 29 பாடல்களால் கொண்டாடியிருக்கிறார். பேள்ளங்கேரி, ஹம்பி, மோதம்பல்லி, காடிபாள்ய போன்ற இடங்களுக்குச் சென்றிருந்தபோது இயற்றிய பாடல்கள் அந்தந்த க்ஷேத்திர மூர்த்தியை புகழ்கின்றன. 'ப்ராண பாரோ ஜகத்ராண பாரோ' என்னும் பாடல் தாசரின் புகழ்பெற்ற பாடல்களில் ஒன்று. சிறிய பாடலானாலும் பிராணதேவரின் சிறப்புகளை விவரிக்கும் அழகான பாடல் இது. இதே போல் ருஜுகணஸ்தரான நான்முக பிரம்மனை, நித்யமுக்தரான லட்சுமிதேவியை தாசர் பற்பல கீர்த்தனைகளினால் பாடியிருக்கிறார். லட்சுமிதேவியைக் குறித்து பாடிய பாடல்களில் பக்தி, பணிவுடன் தாய்க்கு முன் குழந்தை காட்டும் பாச உணர்வும் இருக்கிறது.

ஸ்ரீமன் நாராயணனைக் குறித்து தாசர் பாடிய பாடல்களில் அவரது சரளமான நடை தெரிகிறது. அவரின் மிகப் பிடித்தமான தெய்வமான பாண்டுரங்க விட்டலா, திருப்பதியின் ஸ்ரீனிவாசன், பேலூர் சென்னகேசவன், கொண்டஜ்ஜெ ஜனார்தனன், பதரி நாராயணன், உடுப்பி கிருஷ்ணன், எக்குண்டி வேதவியாஸ, பிளிகிரி ரங்கா, ஷூர்ப்பாலய நரசிம்ம போன்ற ஸ்ரீஹரியின் பல ரூபங்களை தாசர் பலவாறாக பாடியுள்ளார். இவற்றில் சாகித்யம், சங்கீதம், சாஸ்திரம், தத்வபோதம், பாசம் - இவை அனைத்தையும்விட தாசரின் தூய்மையான பக்தி நிரம்பி வழிகிறது. ஸ்ரீஹரியை தந்தை, தாய், பிரபு, ப்ரியன், உறவுக்காரர், நண்பன் என்று பல்வேறு விதங்களாக உருவகித்து பாடியிருக்கிறார்.

தாசர் ஸ்ரீஹரியை கூப்பிடும் விதமே அலாதி. பல பிறவிகளில் தொடர்கின்ற உறவாக நினைத்து, இதயத்திற்கு மிகவும் அருகில் இருப்பவராக, வாழ்க்கையின் முக்கியப் பிடிப்பான ஸ்ரீஹரியை, அன்பு, பாசம், கவலை, பதட்டம், கலக்கம் ஆகிய பல

உணர்ச்சிகளின் வெளிப்பாடுனால் புகழ்ந்திருக்கிறார். 'ஓடோடி பாரோ ஸ்ரீஹரியே என்னய தொரெயெ, பாரோ பாரோ கருணாகர ரங்கனே பாரோ, பாகோபதி கோபனெ மன்மனகெ, சிந்துசயன பாரெயோ மந்தரோத்தாரி' ஆகிய பாடல்களில் காணப்படும் வலி இதயத்தை தொடக்கூடியதாக இருக்கிறது. அழைத்தபோதும் வாராதிருந்தபோது 'பரபாரதேனோ ஹரியே ஹே தொரெயே । கரெது சேருதலிரே । மரெயலிப்புது தரவே' என்று கேட்கிறார்.

'பந்து நீனல்லவேனோ எந்தெந்திகு நீனு । இந்து என்னய காண்ணா முந்தகெ பந்து நில்லோ' என்று புகழ்கிறார். எவ்வளவு அழைத்தாலும் வராதபோது, ஸ்ரீஹரியைக் காணாது பரிதவித்துப் போகிறார் தாசர். ஸ்ரீஹரியின் தரிசனத்தைக் கண்டபோது மகிழ்ச்சிகொண்டு 'தம்மா நீ நோடித்யா ஒம்மனதிந்த பொம்ம மூருத்தி ஸ்ரீவல்லப ரங்கனா' என்று ஆரவாரத்துடன் மனதிலேயே குதிக்கிறார். 'ஹ்ருத்கத தமனாஷ கோவிந்த' என்னும் கோவிந்தாஷ்டோத்தர நாமாவளி என்னும் அக்ஷரமாலா க்ருதி தாசரின் காவியத்திறனுக்கு சாட்சியாக இருக்கிறது. இந்த கிருதியின் ஒவ்வொரு சரணத்திலும் வரும் 'கோவிந்தா கோவிந்தா' என்னும் சொல் கோயில் மணியைப் போல மனதில் ஒலிக்கின்றது. தாசரின் கீர்த்தனைகளில் காணப்படும் கற்பனையானது ஒரு பிறவிக்கவிஞனின் திறனை வெளிக்காட்டுகிறது. சரளமாக வரும் உவமைகள், கீர்த்தனையின் பொருளுக்கு அழகு சேர்க்கின்றன.

கோவிந்ததாசரின் கீர்த்தனைகளில் தம்மைத்தாமே விமர்சனம் செய்துகொள்ளும் பாடல்கள் ஏராளமாக உள்ளன. இதைத்தவிர குருகோவிந்ததாசர், தமது குரு வழங்கிய பல அங்கித நாமங்களை வைத்து, த்ரிபதி நுடியில் அங்கித மாலையை இயற்றியதோடு மட்டுமல்லாமல், தாம் துவக்கத்தில் கொடுத்த 108 அங்கித நாமங்களையும் த்ரிபதியில் ஒரு மாலையாக தொடுத்து தம் பிம்ப மூர்த்திக்கு சமர்ப்பித்துள்ளார்.

இப்படி குருகோவிந்ததாசரின் பாடல்கள் எண்ணிக்கையில் அதிகமாகத் தோன்றுவதைப் போல, அவற்றில் பொதிந்துள்ள அர்த்தங்களும், தத்வ சிந்தனையிலும்கூட அதிகமானவையே. இவை ஹரிதாச சாகித்ய உலகத்தில் நிரந்தரமாக நிற்கத் தகுந்தவை. குருகோவிந்ததாசரின் சிஷ்யர்களுக்கு மற்றும் நட்புகளுக்கு மட்டுமல்லாமல் ஹரிதாச சாகித்யத்தை படிக்கும் அனைவருக்கும் இவை மிகவும் பயனுள்ளவையாக இருக்கின்றன.

## பிற கிரந்தங்கள்

சத்கிரந்தங்களை இயற்றுவது மற்றும் அவற்றை வெளியிடுவது என்பதை தமது வாழ்க்கையின் ஒரு விரதம் / கடமை என்றே நினைத்திருந்த ஸ்ரீகுருகோவிந்ததாசர் தம் குருகளின் மற்றும் பரமகுருகளின் வாழ்க்கைச் சரிதம், ஹரிபக்த விஷயங்களின் தொகுப்புகள், உபநிஷத்களின் சாரம், ஸ்ரீகுருகோவிந்தவிட்டலா என்னும் அங்கிதத்தில் நூற்றுக்கும் மேற்பட்ட பாடல்கள் என பல கிரந்தங்களை 'குருக்ருபா கிரந்தமாலா' மூலமாக வெளியிட்டார். அதிலிருந்தே, ஸ்ரீவாதிராஜ ருஜுத்வ பிரகாசிகா, ஸ்வப்னவிருந்தாவனாக்யான மூலம் மற்றும் கன்னடப் பொழிப்புரை - இரு பாகங்கள், ஸ்ரீவாதிராஜர் இயற்றிய பஞ்சீகரணம், ஸ்ரீமத்சுந்தரகாண்ட ராமாயணம் மற்றும் மானஸ ஸ்ம்ருதி மூலம் மற்றும் ஷட்பதியில் பொழிப்புரை, சோடஷி, சதுர்தசி மற்றும் அத்யாத்ம ரசரஞ்சனி மூலம் மற்றும் கன்னட பொழிப்புரை, கன்னட பஞ்சரத்ன, ஸ்ரீராமசந்திர விட்டலரின் சுளாதிகள், ஸ்ரீமன்மத்வ சஹஸ்ர நாமாவளி, ஸ்ரீஹரிகுரு ஸ்தோத்திரம் மற்றும் சத்சம்பிரதாய பஜனை பத்ததி, மற்றும் தாசரின் காலத்திற்குப் பிறகு வெளியான அன்னபிரம்ம, அங்கித நாமாவளி, அத்யாத்ம ஸ்ரீனிவாச கல்யாணம் ஆகியவற்றையும் இயற்றினார். தாசர் இயற்றிய சாலிக்ராம லட்சணம் ஆகிய கிருதிகள் இன்னும் அச்சில் வரவிருக்கின்றன.

ஸ்வப்னவிருந்தாவனாக்யான கிரந்தத்தை மறுபதிப்பு கொண்டுவருவதற்கும் ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன.

## ஹரிதாச தீபிகா

ஸ்ரீகுருகோவிந்ததாசர் செய்த இன்னொரு சிறந்த செயல் என்னவென்றால் 'ஹரிதாச தீபிகா' என்னும் மாதப் பத்திரிக்கை ஒன்றைத் துவக்கி அதை சிறப்பாக வளர்த்து, தனது மூச்சிருக்கும் வரை நடத்தி வந்தார். அனைத்தையுமே லாப நோக்கோடு பார்க்கும் இந்த உலகத்தில், தாசரின் இந்த தன்னலமற்ற தொண்டு மெச்சத்தக்கது. தம் குரு நடத்தி வந்த 'பரமார்த்த சந்திரோதய' பத்திரிக்கையைப் போலவே, இந்த 16 பக்கங்களைக் கொண்ட 'ஹரிதாச தீபிகா' பத்திரிக்கையையும் பல்வேறு சிறந்த விஷயங்களின் தொகுப்பாக வெளியிடத் தொடங்கினார். எந்தவொரு பிரதிபலனையும் எதிர்பாராமல், லாப நஷ்டங்களைக் கணக்கில் எடுக்காமல் வெறும் பகவத் சேவையாகவே நினைத்து குருகோவிந்ததாசர் மேற்கொண்ட இந்த தார்மிக செயலானது, பின்னர் வந்த பரம்பரைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கியது.

## நவீன புரந்தரதாசர்

ஸ்ரீபுரந்தரதாசர் தமது மொத்த வாழ்க்கையையும் பகவந்தனுக்கு அர்ப்பணம் செய்து, ஹரிதாச தீக்ஷை வகித்து ஹரிசேவை செய்ததுபோல, ஸ்ரீகுருகோவிந்தவிட்டலதாசரும் தமதான அனைத்தையும் பகவந்தனின் சேவைக்கு அர்ப்பித்து, தம் வீட்டையே விட்டலனின் ஆலயமாக மாற்றி, அங்கு நிரந்தரமாக சேவை நடக்குமாறு ஏற்பாடு செய்து, நவீன புரந்தரதாசராக அவரது புகழை பரப்பினார். தம் வீட்டில் மட்டுமல்லாது, மனதிலும் விட்டலனை நிறுவினார்.

# ஸ்ரீபுரந்தரதாசரின் ஆராதனை மகோத்ஸவம்

தம் தாச பரம்பரையின் மூல புருஷரான புரந்தரதாசரின் ஆராதனையை பல்வேறு இடங்களில் மிகவும் விமரிசையுடன் ஞானயக்ஞமாக தமது வாழ்க்கையின் இறுதிவரை நடத்தி வந்தார் குருகோவிந்ததாசர். இத்தகைய ஆராதனைகளை வெறும் பெயருக்காக நடத்தாமல், நம் கலாச்சாரம் / பண்பாட்டினை வளர்ப்பதற்கான ஒரு வாய்ப்பாக எடுத்துக்கொண்டு, தாசர் அவற்றை மிகவும் பக்தியுடன் செய்துவந்தார். இதை ஒரு கடமையாக செய்யாமல், ஆராதனைக்கு 2-3 மாதங்களுக்கு முன்பே அதற்கான ஏற்பாடுகளை செய்யத் தொடங்கி விடுவார். ஆராதனையில் அன்னதானத்தைத் தவிர ஞானயக்ஞத்தையும் நடத்திவந்தார். ஹரிதாச சாகித்யத்திற்கு சம்பந்தப்பட்ட பல்வேறு சத்கிரந்தங்களை அச்சடித்து வெளியிட்டார்.

ஸ்ரீகுருகோவிந்ததாசர், புரந்தரதாசரின் ஆராதனை இந்திய அளவில் கொண்டாடி, ஹரிதாச சாகித்யத்திற்கு ஒரு சிறந்த நற்பெயரை பெற்றுத் தந்தார். அப்போது தாசர், ஸ்வப்னவிருந்தாவனாக்யான ஹோமம், ஹரிகதாம்ருதசார ஹோமம், ப்ருஹதிசஹஸ்ர ஹோமம் போன்ற அபூர்வ ஹோமங்களை மிகவும் சாஸ்திரோக்தமாக செய்ததன் மூலம் ஆராதனையை எப்படி கொண்டாட வேண்டும் என்பதை அனைவருக்கும் தெரியப்படுத்தினார். தத்வவாத பிரவசனங்கள், பாகவத சப்தாஹம், அறிஞர்களின் சங்கமம் ஆகிய ஞானகாரியங்களை நடத்தி பகவத் பக்தியை அனைவரிடமும் பரப்பினார். சிஷ்யர்களுக்கு பயிலரங்கங்களை நடத்தி அடுத்து செய்யவேண்டியவற்றை விவாதிக்கலானார்.

ஒரு முறை குருகோவிந்ததாசர் திருப்பதியில் நடத்திய ஸ்ரீபுரந்தரதாசரின் ஆராதனை விழாவைப் பார்த்த கோயில் நிர்வாகத்தினர், ஹரிதாச சாகித்யத்தின் ஆழத்தை புரிந்துகொண்டு அதன் வளர்ச்சிக்காக என்று ஒரு தனி

இலாகாவையே துவக்கினர். அதுவே இன்றும் இருக்கும் TTDயின் தாச சாகித்ய ப்ராஜெக்ட்.

ஸ்ரீபுரந்தரதாசரின் ஆராதனையை புண்யக்ஷேத்திரங்கள், நகரங்களில் கொண்டாடும் பழக்கத்தைக் கொண்டு வந்த குருகோவிந்ததாசர், பக்தர்களின் வேண்டுதலின் பேரில், ஹரிதாச சாகித்யங்களை சேகரிக்கும் பணியைத் தொடங்கினார். தொடர்ந்து கிரந்தங்களை இயற்றி, அதிலேயே மூழ்கியிருந்த தாசர், அந்த கிரந்தங்களை அனைவரிடமும் கொண்டு சேர்ப்பதற்கு, மற்றும் சிஷ்யர்களையும் சந்திப்பதற்கு, பெங்களூரு, ஹைதை, விசாகபட்டினம், புனே, பிஜாப்பூர், குல்பர்கா, ஹுப்பள்ளி, நிப்பாணி, பெளகாவி, பள்ளாரி, ப்ரொடட்டூர், ஹொஸ்பேட், கொப்பள, பாகல்கோடே என்ற பல இடங்களுக்கு பயணப்பட்டு அங்கிருந்தவர்களுடன் தொடர்பில் இருந்தார். அந்த பயணங்களின்போது, அருகிலிருந்த க்ஷேத்திரங்களை தரிசிப்பது மட்டுமல்லாமல், ஹரிதாச சாகித்யத்திற்கு சம்பந்தப்பட்ட விஷயங்கள் இருந்தால் அவற்றையும் சேகரித்தார். பற்பல சஜ்ஜனர்கள் தாசரின் ஆளுமையால் கவரப்பட்டு அவரின் சிஷ்யர் ஆனார்கள்.

தாசரால் துவக்கப்பட்ட ஸ்ரீபுரந்தரதாசரின் ஆராதனை விழா இன்றும் அவரது சிஷ்யர்களால் இந்திய அளவில் மிகச்சிறப்புடன் கொண்டாடப்பட்டு வருகிறது. பல ஆண்டுகளாக பல்வேறு க்ஷேத்திரங்களில் இந்த விழாவினைக் கொண்டாடிய சிஷ்யர்கள், பின்னர் பெங்களூரின் ராஜராஜேஸ்வரி நகர், நரசிம்மர் மலையில் 'ஸ்ரீஅனுக்ரஹ விட்டல'னை ஸ்தாபித்து அங்கு புரந்தரதாசரின் ஆராதனை மட்டுமல்லாமல் பல்வேறு தார்மிக மகோத்ஸவங்களையும் நிரந்தரமாக நடத்தி வருகின்றனர்.

## சிஷ்யர்கள்

குருகோவிந்ததாசரின் சிஷ்ய பரம்பரை மிகவும் புகழ்பெற்றது. தாசரின் சில சிஷ்யர்கள், தம் குருகள் போட்டுக் கொடுத்த பாதையிலேயே சென்று அவரின் பெயருக்கு புகழ் சேர்த்து வருகின்றனர். குருகள் கொடுத்த அங்கிதத்தை வைத்து, பற்பல பாடல்கள், கிரந்தங்களை இயற்றி தாச உலகத்திற்கு ஒளியூட்டி வருகிறார்கள். ஹரிதாசரின் நினைவில் பல சபைகள், நிகழ்ச்சிகளை நடத்தியவாறு, தம் ஆன்மிக நடவடிக்கை களுக்காக ஆலயம், ஆன்மிகப் பள்ளிகள், ஆசிமங்கள் ஆகியவற்றை நிறுவியிருக்கின்றனர். தார்மிக நிகழ்ச்சிகளை நடத்தி மக்களின் ஆன்மிக வளர்ச்சிக்கு காரணமாகி இருக்கின்றனர்.

## தாசரின் அபூர்வ குணங்கள்

ஶ்ரீகுருகோவிந்தவிட்டலதாசர் பற்பல நற்குணங்களைக் கொண்டிருந்தார். அவரது ஒழுங்கான வாழ்க்கைமுறை அனைவரின் கவனத்தையும் ஈர்த்தது. அவரின் மனதிடம் அபாரமானது. செய்ய வேண்டும் என்று நினைத்ததை தாசர் கண்டிப்பாக செய்து முடித்தே தீருவார். அவர் தீர்மானித்து விட்டார் என்றால், அது நடந்து முடிந்துவிட்டதென்றே பொருள். அதன் வழியில் என்ன பிரச்னைகள் வந்தாலும் அவர் அதைப் பற்றி கவலைப்பட்டதே இல்லை. ஶ்ரீஹரியின் மேல் அசைக்கமுடியாத நம்பிக்கை வைத்து, பக்தியுடன் செயல்களை செய்துவந்தார். தாசரின் முயற்சிகள், உற்சாகம், லட்சியம் ஆகிய அனைத்தும் நாம் கற்றுக்கொள்ள வேண்டியவை.

லௌகிக வாழ்க்கையில் எதிர்கொள்ளும் சவால்களையும் தன் சாதனையின் ஒரு வழியாக மாற்றிக்கொள்ளும் சாமர்த்தியம் கொண்டவர் ஶ்ரீகுருகோவிந்ததாசர். புறத்தில் பார்ப்பதற்கு மிகவும் மெலிந்து காணப்பட்டாலும், தாசர் அகத்தில் மிகவும் வலிமையானவர். எந்த சந்தர்ப்பத்திலும் யாருக்கும் அவர்

பயப்பட்டதில்லை. வாசுதேவனை மறந்தால் மட்டுமே அவர் அதைரியம் கொள்பவராக இருந்தாரே தவிர, வெளியுலகில் காணப்படும் எந்த தடைகளுக்கும் அவர் பயப்பட்டவரில்லை. அனைவரின் பயங்களைப் போக்குபவரான ஸ்ரீஹரியின் அத்யத்புத சக்தியில், அசைக்கமுடியாத நம்பிக்கை வைத்திருந்த தாசர், குரு / பெரியவர்களின் பலத்தினால் எந்தவொரு செயலையும் செய்துமுடிக்கும் வல்லமை பெற்றிருந்தார். இதற்கு அவர் தமது வாழ்க்கையில் சாதித்த பல பெரிய செயல்களே சாட்சி.

தாசரின் கடிதப் போக்குவரத்து பழக்கம் மிகச் சிறந்தது. கடிதங்கள் எழுதுவதிலும், வந்த கடிதங்களுக்கு பதில் போடுவதிலும், அவர் தன் தனித்தன்மையை பின்பற்றி வந்தார். ஒரு அதிகப்படியான சொல்லும் அவர் கடிதத்தில் இருக்காது. வீண் அரட்டை இல்லாமல், சொல்ல வந்த விஷயத்தை மட்டுமே சொல்வார். ஒரு சிறிய அடித்தல், திருத்தல், தவறுகள் என எதையும் அவர் கடிதங்களிலும், ஏன் அவரது வாழ்க்கையிலுமே நம்மால் பார்க்கமுடியாது.

## சமூகத்தின் அங்கீகாரம்

வாழ்க்கையின் முக்கியக் குறிக்கோளாக ஹரிதாச சேவை யினை செய்துவந்த குருகோவிந்ததாசரை, சமூகம் அடையாளம் கண்டு அவரை கௌரவித்து பாராட்டியது. நாட்டின் பல பீடாதிபதிகள், பண்டிதர்கள், ஹரிதாசர்கள் ஆகியோர் அவரை பாராட்டி ஆசிர்வதித்தனர். பல விருதுகளை வழங்கினர்.

1978ல் பெங்களூரின் 'பரிமள கௌெயர பளக' அமைப்பினர் ஏற்பாடு செய்திருந்த ஸ்ரீராகவேந்திரரின் ஆராதனை விழாவில், ஸ்ரீபேஜாவர் மடாதீசரான பரமபூஜ்ய ஸ்ரீவிஸ்வேஷதீர்த்தர் தாசருக்கு 'ஹரிதாச குலதிலக' என்னும் விருதினை வழங்கினார். 1980ல் ஹைதராபாதில் நடந்த ஒரு நிகழ்ச்சியில் ஸ்ரீசோதே வாதிராஜ மடாதீசராக இருந்த பரமபூஜ்ய

ஸ்ரீவிஸ்வோத்தமதீர்த்தர் 'தாசதர்ம ப்ரவர்த்தக' என்னும் விருதைக் கொடுத்து நம் தாசரை கௌரவித்தார்.

தானாக வந்த இந்த கௌரவங்களை தாசர் என்றும் தன்னுடைய வேலைக்காக வந்தது என்று நினைக்கவில்லை. அனைத்தும் தம் குருகளான தந்தெமுத்துமோகனதாசருக்குக் கிடைத்த கௌரவம் என்றே கருதினார். 'நின்ன ஒலுமெயிந்த நிகிள ஜனரு பந்து என்ன ஒலயிசுவரோ மஹராய । நன்னதேனுண்டோ நின்னதே சகல சம்பத்து' என்பதுபோல அனைத்தையும் மரியாதையுடன் குருபிம்பருக்கு சமர்ப்பித்தார். இந்த பணிவே குருகோவிந்ததாசரின் மிகச் சிறந்த குணமாக இருந்தது.

## தாசரின் இறுதிக்காலம்

குருகோவிந்தவிட்டலதாசர் தமது வாழ்க்கையின் இறுதிக்கணம் வரையிலும் ஹரிதாச சாகித்யம் தொடர்பான செயல்களை விடவில்லை. ஹரிஸ்மரணையை நிறுத்தவில்லை. அவர் என்றைக்கும் லௌகீக வாழ்க்கையின் பிடியில் விழுந்தவரில்லை. மகன், மகள், பேரர்கள் நிறைந்த பெரிய குடும்பம் என்றாலும், அவர் எப்போதும் ஆத்யாத்மிக சிந்தனையிலேயே இருந்து வந்தார்.

தாசரின் இறுதிக்கணம் அனந்தபுரத்திலிருந்த அவரது மகனின் இல்லத்தில் நிகழ்ந்தது. 89 வயது நிரம்பிய தாசர், தேதி 11 ஜனவரி 1983 (துந்துபி நாம சம்வத்ஸரம், மார்கசிர பகுள த்வாதசி) இவ்வுலகை விட்டு நீங்கி, குருகோவிந்தவிட்டலனின் பாதாரவிந்தங்களை சென்றடைந்தார். உடலால் அவர் நம்மை விட்டு நீங்கினாலும், குருகோவிந்தவிட்டலதாசரின் வாழ்க்கை ஒரு நந்தாதீபத்தைப் போன்று ஹரிதாச உலகத்தில் நிரந்தரமாக சுடர்விட்டுப் பிரகாசிக்கும்.

***

நாம ரூபாத்மகமான இந்த உலகத்தை, ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்க ஸ்ரீமதாசார்யர் சொல்லிக் கொடுத்த விஷயம் என்னவெனில் - ஒவ்வொரு மனிதனிலும், ஒவ்வொரு பொருட்களிலும், பகவந்தன் நிலைத்திருந்து, பிம்பரூபமாக அவர்களின் / அவற்றின் ஆளுமையை / நடவடிக்கைகளை நடத்துகிறான். ஆகையால், அனைவரும், அனைத்து பொருட்களும் அவனையே சேர்ந்ததாகும். அனைத்து மொழிகளின் அனைத்து சொற்களும் அவனையே புகழ்கின்றன. இப்படி அனைத்து ரூபங்களும், அனைத்து நாமங்களும் அவனையே சேர்ந்தவை என்னும் அனுசந்தானத்துடன் (நற்சிந்தனையுடன்) அவற்றை அவனுக்கே சமர்ப்பிக்க வேண்டும்.

ஸ்ரீமதாசார்யர், தந்த்ரசார சங்க்ரஹத்தில், பிரணவத்தின் எட்டு எழுத்துகளில் நிலைபெற்றிருக்கும் எட்டு பகவத்ரூபங்களிலி ருந்து தோன்றிய அஜ முதலான 50 பகவத்ரூபங்களையும், பிரணவத்தின் எட்டு எழுத்துக்களிலிருந்து தோன்றிய அ-காரத்திலிருந்து துவங்கி ள-காரம் வரைக்குமான 50 எழுத்துக்களின் அர்த்தங்களைச் சொல்லி, அஜாதி 50 ரூபங்கள், அந்த அகாராதி எழுத்துக்களிலிருந்து வெளிப்பட்டிருக்கின்றன என்பதை நிரூபித்திருக்கிறார். அப்படியே கடைசி எழுத்தான க்ஷ-காரமானது, ந்ருசிம்ஹ ரூபி பகவந்தனைக் குறிக்கிறது என்பதையும் நிரூபித்திருக்கிறார்.

ஆகையால், எந்தவொரு மொழியில் எந்தவொரு சொல்லைக் கேட்டாலும் / சொன்னாலும், அந்தந்த எழுத்துக்களைச் சேர்ந்த அந்தந்த பகவத்ரூபங்களை சிந்திப்பதுடன், அந்த ரூபங்களுக்கு சம்பந்தப்பட்ட எழுத்துக்களின் அர்த்தத்தைப் பற்றியும் சிந்திக்க வேண்டும்.

உதாரணத்திற்கு, ‘நாயி’ (நாய்) என்ற சொல்லைக் கேட்டால், அதில் நான்கு எழுத்துகள் நமக்குத் தெரிகின்றன. ந, அ, ய மற்றும் இ. அதிலிருந்து நான்கு பகவத்ரூபங்களும் நமக்குத் தெரிகின்றன. ந - நம்ய, அ - அஜ, ய - யக்ஞ மற்றும் இ -

இந்திர. நம்யனின் அருளுக்குப் பாத்திரமானதால், அது தன் குட்டிகளைப் பெறும் சக்தியைப் பெறுகிறது. அஜனின் அருளுக்குப் பாத்திரமாகி, இந்த பிறப்பை எடுத்திருக்கிறது. யக்ஞனின் அருளைப் பெற்றதாலேயே, அந்த நாய் தன் முந்தைய அல்லது அடுத்த பிறவியில், யக்ஞத்தில் பங்கு வகிக்கக்கூடிய அருகதையைப் பெறுகிறது. இப்படியான சிந்தனையுடன், நாய் என்று சொல்லும்போது / கேட்கும்போது, அது மந்திர துல்யமாக அதற்குத் தகுந்த பலனை நமக்குத் தருகிறது.

'அ மொதலு க்ஷ-காராந்த ஈ மஹாவர்ணகளெல்ல ஸ்வாமியாத விஷ்ணுவின நாமகளெந்து திளிதவரிகெ ஆனந்தா' என்று ஸ்ரீவிஜயதாசர் சொல்லியிருப்பதைப் போல, ஒவ்வொரு எழுத்தும் பகவந்தனின் நாமம் என்று சொன்ன பிறகு, அந்த எழுத்துகளால் ஆன, அனைத்து மொழிகளின் அனைத்து வாக்கியங்களும் அவனுடைய பெயர்களே ஆகின்றன. அவனுக்கு வெறும் ஒரு பெயர் மட்டும் அல்ல. அனைத்தும் அவன் பெயர்களே. ஆகவே, அந்த சொற்கள் அவனின் மகிமைகளை சிறப்பாக விளக்குகின்றன. இப்படியாக நாம் சிந்திப்பதின் மூலம், எந்தவொரு சொல்லை சொல்லும்போதும் அல்லது கேட்கும்போதும் அதிலிருந்து வெளிப்படும் பகவத்ரூபங்களின் நினைவு நமக்கு வந்தால், அதைவிட ஆனந்தம் / மகிழ்ச்சி வேறு என்ன இருக்கமுடியும்?

இப்படி நாம் சொல்லும், கேட்கும் ஒவ்வொரு வாக்கியத்தையும், சொல்லையும், எழுத்தையும் அந்த பகவந்தனுக்கு சமர்ப்பிக்க வேண்டுமெனில், அந்தந்த வாக்கியம், சொல், எழுத்து ஆகியவை எந்தெந்த பகவத்ரூபங்களை தெரிவிக்கிறது என்பதை கண்டிப்பாக நாம் அறிந்திருக்க வேண்டும். தந்திரசார சங்கிரஹ கிரந்தத்தில் ஸ்ரீமதாசார்யர் இதனை விளக்கியிருக்கிறார்.

# ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசர் நமக்குக் கொடுத்த பரிசு

இந்த 51 எழுத்துகளால் வெளிப்படும் பகவத்ரூபங்களைப் பற்றிய அறிமுகத்தை, மைசூரின் ஸ்ரீ குருகோவிந்தவிட்டல தாசர், கன்னடத்தில் 'மாத்ருகான்யாச' பாடலின் மூலம் நமக்குக் கொடுத்திருக்கிறார். 27 நட்சத்திரங்களைக் குறிக்கும் வண்ணம் (இது நட்சத்திர மாலிகா ஸ்தோத்திரம் என்றும் சொல்லப்படுகிறது), 27 நுடிகளில், 51 பகவத்ரூபங்களை வணங்குகிறார் தாசர். 'அஜ' என்று அவர் சொல்லாவிட்டாலும், 'அலவமஹிமே', 'ஆலயதொளு', 'ஈக்ஷிஸு' என்று அந்தந்த எழுத்திலிருந்து தொடங்கும் (அந்த பகவத்ரூபங்களின் சிறப்புகளை விளக்கும்படியான) ஒரு சொல்லை சொல்லி, அதை அந்த பகவத்ரூபத்திற்கே சமர்ப்பிக்கிறார்.

ஏக பஞ்சாஷது கோவிந்த | வர்ண
ஏகாத்ம மாலெய கோவிந்த |
லோகைகனாத2 குரு கோவிந்த | விட்டல
ஸ்வீகரிஸென்ன காயோ கோவிந்த ||27

என்று முடியும் கடைசி நுடியில் வேண்டியிருப்பதைப் போல, 51 எழுத்துக்களால் ஆன மாலையை குருகோவிந்தவிட்டலனுக்கு சமர்ப்பிக்கும் மூலம், அந்த எழுத்துக்களாலான சொற்களை, வாக்கியங்களை, பகவந்தனுக்கு அந்த மாலையின் மூலம் சமர்ப்பித்தது போலாயிற்று.

அனைத்து சொற்களாலும் அவன் எப்படி புகழப்படுகிறான்?

ஸ்ரீகுருகோவிந்தவிட்டல தாசர், எளிய கன்னடத்தில், 27 நுடிகளைக் கொண்ட வர்ணமாலை என்னும் இந்த பாடலை இயற்றியிருக்கிறார். அவற்றில் அடங்கியிருக்கும் அழகினை, ஆழமான அர்த்தங்களை புரிந்து கொள்ளாமல், அந்தப் பாடலை அப்படியே பாடி கோவிந்தனுக்கு அர்ப்பித்தால், அது ஞான

பக்தியுடன் அர்ப்பித்தைப் போல ஆகாது. அந்த ஞான பக்திகளை வேண்டியது போலவும் ஆகாது. ஆகவே, அதன் அழகினை, சிறப்பினை புரிந்து கொள்வதற்கு முயல்வோம்.

51 எழுத்துக்களால் வெளிப்படுபவனான பகவந்தனின் 51 ரூபங்களைக் குறித்து வணங்கும்படியாக இந்த கிருதி இயற்றப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு வரியிலும் முதல் சொல்லானது, அந்த எழுத்திலிருந்து துவங்கும் பகவத் ரூபங்களை நமக்கு விளக்குகிறது. உதாரணத்திற்கு: அ- எழுத்தில் வெளிப்படும் கோவிந்தனின் ரூபமாக 'அஜ' ரூபத்தை விளக்குகிறார் தாசர். அந்த அஜனானவன், 'அலவமஹிம' (எண்ணிக்கையற்ற மகிமைகளைக் கொண்டவன்) மற்றும் அலபோதரப்ரிய (ஸ்ரீமன் மத்வாசார்யரால் வணங்கப்படுபவன்) என்று அந்த ரூபத்தின் சிறப்புகளையும் மிகவும் அழகாக பாடியுள்ளார் தாசர்.

பகவந்தன், அகாராதி எழுத்துக்களில் நிலைத்திருப்பது மட்டுமல்லாமல், அந்த அகாராதிகள் நித்யமாக இருப்பதைப் போல, அனைத்து இடங்களிலும் பரவியிருப்பதைப் போல, லௌகிக அர்த்தங்களை வெளிப்படுத்துவதைப் போல, அந்த பகவந்தனின் தர்மங்களையும், அதன் பின்னணியில் அவனின் மகிமைகளையும் நாம் சிந்திக்க வேண்டும்.

ஹ்ருத்க[3]த தமனாஷ கோவிந்த | என்ன
ஹ்ருத்கு[3]ஹதொ[3]ளு தோரோ கோவிந்த ||ப

அலவ மஹிம ஹரி கோவிந்த | நம்ம
அலவ போ[4]த[3]ர ப்ரீய கோவிந்த ||
ஆலயதொளு நில்லோ கோவிந்த | ஹ்ரு
தா[3]லயத[3]லி தோரோ கோவிந்த ||1

இக்ஷுசாபன பிதனெ கோவிந்த । நீ
னிக்ஷுத[4]ன்வாரினுத கோவிந்த ।
ஈக்ஷிஸோ கருணதி கோவிந்த । நீ
நீக்ஷிஸலோஷவேனோ கோவிந்த ।।2

உரக[3]சயனனே கோவிந்த । நம்ம
உரக[3]ராய வைகுண்ட[2] கோவிந்த ।
ஊரூரு சரிஸிதெ[3] கோவிந்த । நி
ம்மூரிகெ கரெதொ[3]ய்யோ கோவிந்த ।।3

ருகா[3]தி த்ரயிமயி கோவிந்த । ஹரி
ருக்[3]வினுதனெ குரு கோவிந்த ।
ரூக்ஷ சத்வினுதனெ கோவிந்த । ஹரி
ரூகார ப்ரதிபாத்[3]ய கோவிந்த ।।4

ஏதத்தெனிஸியு ஹ்ருத்க[3] கோவிந்த । நீ
நேதகெ காணெயாகி[3]ஹெ கோவிந்த ।
ஐததாத்மயைக சர்வ கோவிந்த । நீ
னைதருவுது மனகெ கோவிந்த ।।5

ஓதப்ரோதனெ ஜக[3]தி கோவிந்த । நீ
ந்னோதத்வனெ திளிஸோ கோவிந்த ।
ஔதணித்தளெ ஸதி கோவிந்த । நீ
நௌதுஹொண்டிஹதேகோ[3] கோவிந்த ।।6

அங்காங்கி பா[4]வதி[3] கோவிந்த । நீ
நங்காங்கதி க்ரீடி[3]பெ கோவிந்த ।
அஹரஹர்மனத[3]லி கோவிந்த । நீ
அஹரஹர்விஹரிஸோ கோவிந்த ।।7

கபிலாத்ம ஶ்ரீஹரி கோவிந்த । நம்ம
கபிவர பூஜ்யனெ கோவிந்த ।
க[2]பதிக[3]மன குரு கோவிந்த । ஜக
க[2]ர்ப்பர ஸீளித கோவிந்த ।।8

க$^{3}$ருடத்வஜனெ பாரோ கோவிந்த । ஜக
க$^{3}$ருவவ களெயோ கோவிந்த ।
க$^{4}$ர்மாஸ ஸமந்தாது கோவிந்த । சூக்த
க$^{4}$ர்மக்கெ விஷயனெ கோவிந்த ।।9

ஙகார பிரதிபாத்ய கோவிந்த । பா
ங்தவு ஜகவெல்ல கோவிந்த ।
சர்மதொளுத்கீ$^{3}$த கோவிந்த । இத்து
சர்ம லாவண்யத கோவிந்த ।।10

சந்தஸ்ஸினின்சன்ன கோவிந்த । நாகி$^{3}$
சந்தோபிதனெனிபெ கோவிந்த ।
ஜங்க$^{3}$ம சரவ்யாப்த கோவிந்த । நம்ம
ஜங்கு$^{3}$ளிகள களெயோ கோவிந்த ।।11

ஜஷ ரூபி கமட$^{2}$னெ கோவிந்த । நம்ம
ஜஷ கேதுபித காயோ கோவிந்த ।
ஞான ஞேய ஞாத்ரு கோவிந்த । ப்ர
ஞான க$^{4}$னனெனிபெ கோவிந்த ।।12

டங்கி எம்புவனெ கோவிந்த । நம்மா
டங்கவ களெயோ கோவிந்த ।
ட$^{2}$க்கு ட$^{2}$வளிகார கோவிந்த । நம்ம
ட$^{2}$க்கிஸி ஹாகதி$^{3}$ரோ கோவிந்த ।।13

ட$^{3}$ரகோ ட$^{3}$யார்பித கோவிந்த । நம்மெ
ட$^{3}$ரனு பரிஹரிஸொ கோவிந்த ।
ட$^{4}$ண ட$^{4}$ண நாததி கோவிந்த । பலு
ட$^{4}$ணிரெம்போ வாத்$^{3}$யதி$^{3}$ கோவிந்த ।।14

ணனாம வாச்யனெ கோவிந்த । ப்ர
ணமன மாடுவெனோ கோவிந்த ।
தருணார்க்க ப்ரபெ$^{4}$ய கோவிந்த । நம்ம
தருணி த்ரௌபதிவரத கோவிந்த ।।15

